

# கல்கி பொருளடக்கம்


மலர் 11
இதழ் 32

1952 மார்ச் 9

கர ௵
மாசி 26



கல்கி

மலர் 11

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 32

# காங்கிரஸ் முன்னணிப் படை

ஆந்திர காங்கிரஸ் தலைவர்கள் காங்கிரஸுக்குப் புத்துயிர் தரும் பணியை நல்ல முறையில் தொடங்கி யிருக்கிறார்கள். மாகாண காரியக் கமிட்டி அங்கத்தினர் அனைவரும் தங்கள் பதவிகளை ராஜீநாமா செய்து விட்டார்கள். புதிய கமிட்டி நல்ல முறையில் அமைவதற்குச் சூழ்நிலை ஏற்படும் வரையில் மாகாணக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ சஞ்சீவி ரெட்டியார் தாற்காலிகமாக நிர்வாகம் செய்து வருவார்.

இப்படிச் செய்வதற்கு அவசியம் உண்டா என்பதைப் பற்றி இரு தரப்பு வாதப் பிரதி வாதங்களும் ஆந்திர மாகாணக் கமிட்டியில் நடைபெற்றன. கடைசியாக, ராஜீநாமா செய்வது அவசியந்தான் என்று ஏக மனதாகத் தீர்மானித்துக் காரியத் திலும் நிறைவேற்றி வைத்திருக்கிறார்கள்.

ஏழெட்டு மாதங்களுக்கு முன்னால் ஆந்திர மாகாண கமிட்டியிலிருந்து ஒரு பெரும் கூட்டத்தார் பிரிந்து போனார்கள். பிரிந்து போனவர்கள் மறுபடியும் பிரகாசம் கோஷ்டி என்றும், ரங்கா கோஷ்டி என்றும் பிரிந்தார்கள். இவ்விதம் காங்கிரஸிலிருந்து பிரிந்த மூன்று கோஷ்டியினரும் தனித் தனியாக அபேட்சகர்களை நிறுத்திப் பொதுத் தேர்தலில் போட்டி யிட்டதில், மூன்று கோஷ்டிக்கும் நல்ல படிப்பினை கிடைத்தது. காங்கிரஸ் சார்பான வோட்டுக்களை மேற்படி மூன்று கோஷ்டியும் பிரித்துக் கொண்டதால் பல தொகுதிகளில் காங்கிரஸ் எதிர்ப்பாளர் வெற்றி பெற்றனர்.

இந்தப் படிப்பினையினால் ஆந்திர காங்கிரஸ் சகோதரர்கள் பலன் அடையப் போகிறார்களா, பழைய பிடிவாதப் போக்கிலேயே போகப் போகிறார்களா என்ற சந்தேகம் இருந்தது. காங்கிரஸ் ஸ்தாபனத்தில் எஞ்சி நின்றவர்கள் படிப்பினையை உணர்ந்து பயன் அடைந்திருக்கிறார்கள் என்று மேற்படி காரியக் கமிட்டி ராஜீநாமாவிலிருந்து தெரிய வந்திருக்கிறது. இது திருப்திகரமான நிலைமைதான். இம் மாதிரியே பிரகாசம் கோஷ்டியும் ரங்கா கோஷ்டியும் பொதுத் தேர்தல் படிப்பினையால் பயன் பெற்று மறுபடியும் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க முன் வந்தால் ஆந்திர நாட்டுக்கு விமோசனம் உண்டு.

*   *   *   *

தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில், காங்கிரஸ் வேலைக்குப் புத்துயிர் அளிக்கும் பேச்சு இன்னும் பேச்சளவிலேதான் இருந்து வருகிறது. இதுவரையில் காரியத்தில் ஒன்றும் நடைபெறவில்லை.

பொதுத் தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸ் எதிர்ப்பாளர்கள் தமிழ் நாடெங்கும் நாற்றுக்கணக்கான பொதுக் கூட்டங்கள் நடத்தி யிருக்கிறார்கள். ஜயித்த இடங்களில் ஜயபேரிகை முழக்கி யிருக்கிறார்கள்; தோல்வியுற்ற இடங்களிலும் அவர்கள் அநேக பொதுக் கூட்டங்கள் நடத்தித் தங்களுக்கு வோட்டுக் கொடுத்தவர்களுக்கு நன்றி செலுத்தி யிருக்கிறார்கள்.

ஆனால் காங்கிரஸின் சார்பாகத் தமிழ் நாட்டில் பொதுஜனத் தொடர்புக்குரிய காரியம் எதுவும் நடந்திருப்பதாகத் தெரியவில்லை.

பொதுத் தேர்தலுக்குப் பிறகு புது டில்லிக்குப் போன தமிழ் நாட்டுத் தலைவர்களைப் பார்த்துப் பண்டித ஜவாஹர்லால் நேரு "உடனே திரும்பிப் போய்ப் பொதுஜனத் தொடர்பை வளர்த்துக் கொள்ளுங்கள்!" என்றார். "ஆகட்டும்" என்று சொல்லி விட்டுத் திரும்பி வந்தார்கள். அவ்வளவுடன் விஷயம் நின்று விட்டது.

தேர்தலில் வெற்றி பெற்ற காங்கிரஸ் வாதிகளுக்குச் சில பணக்காரர்கள் டீ பார்ட்டிகள் கொடுத்தார்கள். "இவர்கள் ஒருவேளை மந்திரிகளாக வந்தாலும் வருவார்கள்; எல்லாவற்றுக்கும் ஒரு டீ பார்ட்டியைக் கொடுத்து வைக்கலாம்!" என்பது அந்தப் பணக்காரர்களின் எண்ணம். அந்தகைய டீ பார்ட்டிகளில் இலை சம்பிரதாயமான உபசாரப் பேச்சுக்கள் நடந்திருக்கின்றன.

தேர்தலில் காங்கிரசின் வெற்றிக்காக உழைத்த தொண்டர்கள் வாசலில் நின்று பார்த்து விட்டு முணுமுணுத்துக் கொண்டே திரும்பினார்கள். அவர்கள் முணுமுணுத்த வார்த்தைகள் என்னவாயிருக்கும் என்று நாமே ஊகித்துக் கொள்ளலாம்.

தமிழ் நாட்டில் பொதுஜனத் தொடர்பு ஏற்படுத்தும் நிலைமை இவ்விதம் இருக்கிறது.

* * *

தமிழ் நாடெங்கும் ஆயிரக்கணக்கான காங்கிரஸ் வாதிகளும் ஆர்வமுள்ள தேச பக்தர்களும் உண்மைத் தொண்டர்களும் துடி துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

"காங்கிரஸ் எதிர்ப்பாளரின் ஆர்ப்பாட்டம் இவ்வளவு பிரமாதமாயிருக்கிறதே! காங்கிரஸின் சார்பாக ஒன்றும் நடைபெறவில்லையே!" என்று அவர்கள் கையை நெரித்துக் கொள்கிறார்கள்.

தமிழ் நாட்டுக் காங்கிரஸின் புனர் நிர்மாணம் வெறும் பேச்சோடு நின்று விடுமானால் என்ன செய்வது என்பது பற்றித் தமிழ் நாடெங்குமுள்ள காங்கிரஸ் அபிமானிகள் இப்போதிருந்தே தீவிரமாகச் சிந்திக்க வேண்டும்.

மாகாண காங்கிரஸ் நிர்வாகத்துடன் கோபித்துக் கொண்டு காங்கிரஸையே விட்டு விடுவதோ, அல்லது முன்போல் அசட்டையாயிருந்து கோட்டை விட்டு விடுவதோ சரியாகாது.

ஜவாஹர்லால்நேரு காங்கிரஸில் இருக்கும் வரையில் உண்மையான தேசபக்தர்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்தை விட்டுவிட முடியாது.

"எப்படியாவது போகட்டும்" என்று அலட்சியமாயிருந்து விடுவதும் பெருந் தவறாகும்.

தமிழ் நாடெங்குமுள்ள காங்கிரஸ் அபிமானிகள் சேர்ந்து காங்கிரஸ் முன்னணிப் படை ஒன்றை அமைப்பதற்குப் பிரயத்தனப் படவேண்டும்.

ஜவாஹர்லால்ஜியின் யோசனைப்படி மேற்படி முயற்சியை மேலே யிருந்து தொடங்குவதற்குப் பதிலாகக் கீழேயிருந்து தொடங்குவது நலம்.

அதாவது, அந்தந்தத் தாலூகாவிலும் அந்தந்த ஜில்லாவிலும் உள்ள காங்கிரஸ் அபிமானிகள் ஒன்று சேர்ந்து தாலூகா, ஜில்லா காங்கிரஸ் முன்னணிப் படைகளை அமைக்கவேண்டும்.

பின்னர், எல்லாத் தாலூக்கா — ஜில்லாத் தொண்டர் படைகளும் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து மாகாண காங்கிரஸ் முன்னணியை அமைக்க வேண்டும்.

தற்போதுள்ள மாகாண காங்கிரஸ் நிர்வாகிகள் ஏதாவது செய்தாலும் சரி, ஒன்றும் செய்யாவிட்டாலும் சரி, தேசத்துக்கும் காங்கிரஸுக்கும் நேருவின் தலைமைக்கும் நம்முடைய கடமையை நாம் செய்வது என்று காங்கிரஸ் முன்னணிப் படையைச் சேர்ந்தவர்கள் கங்கணம் கட்டிக் கொள்ள வேண்டும்.

காங்கிரஸ் மகாசபையின் இலட்சியங்களையும் நேரு சர்க்காரின் சாதனைகளையும் பொது மக்களிடையே எடுத்துச் சொல்வதும், காங்கிரஸ் எதிர்ப்பாளரின் பொய்ப் பிரசாரங்களை மறுப்பதும் இவர்களுடைய கடமையாக இருக்கவேண்டும்.

அத்துடன் பொது மக்களின் உண்மையான குறைகளைச் சர்க்கார் நிர்வாகிகளின் செவிட்டுக் காதில் ஏறும்படியாக உரத்த குரலில் எடுத்துக் கூறியும் வர வேண்டும்.

இவ்வாறு உறுதிகொண்ட காங்கிரஸ் முன்னணித் தொண்டர்கள் ஜில்லாவுக்குக் குறைந்த பட்சம் நூறுபேர் முன்வந்து கட்டுப்பாட்டுடன் வேலை செய்யத் தொடங்கினால், தமிழ் நாட்டில் காங்கிரஸ் புத்துயிர் பெறும். மாகாண காங்கிரஸ் ஸ்தாபனத்திலுள்ள குறைபாடுகளும் அகன்று விடக்கூடும். மீண்டும் தமிழ்நாடு அகில இந்தியாவின் முன்னணியில் தலைநிமிர்ந்து நிற்க முடியும்.

## தஞ்சாவூர்க் கூட்டம்

அடுத்த தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தைத் தஞ்சை ஜில்லாவில் நடத்துவதென்று முடிவு செய்திருப்பதாகத் தெரிய வருகிறது. இது நல்ல யோசனை தான்.

தமிழ் நாட்டுக் காங்கிரஸுக்குப் புத்துயிர் அளிக்கும் முயற்சியில் தஞ்சை ஜில்லா கேந்திர ஸ்தானத்தை வகிக்கிறது.

காங்கிரஸின் செல்வாக்கிலிருந்து தஞ்சை ஜில்லா நழுவிவிட்டால், தமிழ் நாட்டையே காங்கிரஸின் நஷ்டக் கணக்கில் எழுதி விடலாம்.

ஆகையால் மாகாண காங்கிரஸ் கமிட்டி தஞ்சையில் கூடும் போது அந்த ஜில்லாவில் காங்கிரஸுக்குப் புத்துயிர் கொடுத்து அமைப்பது பற்றியும் யோசிக்க வேண்டும்.

தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி இரண்டு வருஷத்துக்கு மேலாக இயங்காமலே இருக்கிறது. அதை மறுபடியும் இயங்க வைக்க வேண்டும்.

தஞ்சை ஜில்லாப் பெரிய மனிதர்களிடையே உள்ள கோஷ்டிப் பூசல்கள் தான் அந்த ஜில்லா காங்கிரஸ் கமிட்டி இயங்காம லிருப்பதின் காரணம். இந்தப் பூசலைத் தீர்த்து வைக்க மாகாண காங்கிரஸ் தலைவர்கள் பிரயத்தனம் செய்யவில்லை. ஒரு சமயம் ஒரு கோஷ்டியையும் இன்னொரு சமயம் இன்னொரு கோஷ்டியையும் ஆதரித்துப் பூசலை வளர்த்து வந்திருக்கிறார்கள்.

இரண்டு கோஷ்டித் தலைவர்களிலே ஸ்ரீ வி. நாடிமுத்துப்பிள்ளை பொதுஜனத் தொடர்பைப் பாதுகாத்து வந்திருக்கிறார். இது தேர்தல் முடிவுகளிலிருந்து தெரிகிறது. அந்த ஜில்லாவில் பல தோல்விகளுக்கு மத்தியில் ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளையும் அவர் சகாக்களும் வெற்றி யடைந்திருக்கிறார்கள்.

இன்னொரு கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் தோல்வி யடைந்திருக்கிறார்கள்.

இருந்த போதிலும், தஞ்சாவூர் ஜில்லாவின் நீடித்த நன்மையை முன்னிட்டு,—தமிழ் நாட்டின் மொத்த நன்மையை முன்னிட்டு, — இரண்டு கோஷ்டித் தலைவர்களுமே சிறிது காலத்திற்கு ஜில்லா காங்கிரஸ் நிர்வாகத்திலிருந்து ஒதுங்கி நிற்க முன்வர வேண்டும்.

சென்ற பொதுத் தேர்தலின் போது உண்மையான தேச பக்தர்கள்,—காங்கிரஸ் தொண்டர்கள் பலர்,—காங்கிரஸ் வெற்றிக்காக அரும் பாடுபட்டு உழைத்தார்கள். எவ்வித பிரதி பலனையும் எதிர்பாராமல் இரவு பகலாகப் பாடுபட்டார்கள்.

ஸ்ரீ அய்யப்ப முதலியார், ஸ்ரீ டி. கே. சீனிவாசய்யர் போன்ற நூற்றுக் கணக்கானவர்கள் இவ்விதம் காங்கிரஸுக்காகப் பாடுபட்டார்கள். மனக் கசப்பினால் ஒதுங்கி நிற்பதற்கு இவர்களுக்குப் போதிய காரணங்கள் இருந்தன. ஆயினும் அப்படி அவர்கள் ஒதுங்கி நிற்காமல் உழைத்தார்கள்.

இத்தகையவர்களைக் கொண்டே தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியைத் திருத்தி அமைப்பது மிகவும் நலமாயிருக்கும்.

ஹரிஜனங்கள், குடியானவர்கள் எல்லாருடனும் சரிசமானமாகக் கலந்து பழகித் தொண்டு செய்யக் கூடியவர்களும், விஷயங்களைத் தெளிவாய் எடுத்துச் சொல்லி மக்களின் மனதை மாற்றக் கூடிய வாக்கு வன்மை உள்ளவர்களும் புதிய ஜில்லாக் கமிட்டியிலும் தாலுகா கமிட்டிகளிலும் இடம் பெற வேண்டும்.

ஜில்லா முழுவதற்கும் ஒரு பெரிய கமிட்டியை அமைப்பதைக் காட்டிலும் மூன்று பார்லிமெண்டு தொகுதிகளின் பிரதேசங்களில் தனித்தனியாக மூன்று கமிட்டிகளை அமைப்பது நல்லதா என்பதையும் யோசிக்க வேண்டும். இதனால் கோஷ்டிச் சண்டைகள் தலைகாட்ட இடமில்லாமற் செய்யலாம்.

தஞ்சை ஜில்லாவைக் காங்கிரஸுக்குக் காப்பாற்றிக் கொடுப்பதற்கு அங்கே கூடப்போகும் மாகாணத் தலைவர்கள் ஒரு பெரு முயற்சி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# மனச் சோர்வு — ஒரு பெரும் வியாதி

சென்ற இதழ் ஒன்றில் "மனிதன் எப்படி உயர்கிறான்!" என்ற தலைப்புடன் வெளியான கட்டுரையைப் பற்றிப் பல கடிதங்கள் வந்திருக்கின்றன. அவற்றில் சிலவற்றை வேறு பக்கங்களில் காணலாம்.

நம் கருத்தை ஆதரித்து எழுதியிருப்பவர்கள், எதிர்த்து எழுதி யிருப்பவர்கள் எல்லாருக்கும் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறோம்.

"சம்சாரம்" "பாதாள பைரவி" என்னும் படங்கள் நல்ல படங்களா, இல்லையா என்பது விவாதத்தில் உள்ள பிரச்னை அல்ல.

அந்தப் படங்களில் ஏதோ சில நல்ல அம்சங்கள் இல்லாவிட்டால் இவ்வளவு வெற்றிகரமாக அவை ஓடியிருக்க முடியாது.

டெக்னிக் விஷயத்தில் அவை சிறந்து விளங்குகின்றன என்று உடனே சொல்லி விடலாம்.

இதில் அதிசயம் ஒன்றுமில்லை.

தற்சமயம் இந்தியாவிலேயே உயர்ந்த ஸ்டுடியோக்கள் சென்னை நகரில்தான் இருக்கின்றன. ஜெமினி, வாஹினி, ஏ. வி. எம். ஸ்டுடியோக்கள் தென்னாட்டுக்கே சிறப்பளிக்கக் கூடியவை. பம்பாய்—கல்கத்தா ஸ்டுடியோக்களைப் பார்த்து விட்டுச் சென்னையிலுள்ள மேற்கூறிய ஸ்டுடியோக்களைப் பார்ப்பவர்கள் நரகத்திலிருந்து சொர்க்கத்துக்கு வந்ததாக எண்ணுவார்கள்.

நுட்ப சாஸ்திரத் திறமையில் நம்மவர்கள் இப்போது சிறந்து முன்னேறி யிருக்கிறார்கள். சர்வதேச பிலிம் விழாவுக்காகத் திறந்த வெளியில் அமைத்திருந்த பிரம்மாண்டமான ஸினிமாத் திரையும் ஆயிரக் கணக்கானவர்கள் படம் பார்ப்பதற்குச் செய்திருந்த ஏற்பாடுகளும் நம்முடைய ஸினிமா நுட்ப சாஸ்திர நிபுணர்களுக்குப் பெருமை தருவதாகும்.

இதையெல்லாம் குறித்து நாம் மகிழ்ச்சியும் பெருமையும் அடைந்திருக்கிறோம்.

**நம்முடைய தேச மக்களை உயர்த்தக் கூடிய படங்களை நம் ஸினிமா முதலாளிகள் எடுத்திருக்கிறார்களா? வெளி நாட்டாரிடம் காட்டிப் பெருமைப்படக் கூடிய படங்களை நம்மவர்கள் எடுத்திருக்கிறார்களா?—இவைதான் விவாதத்தில் உள்ள முக்கியமான பிரச்னைகள்.**

அத்தகைய படங்களை இதுகாறும் நம்முடைய பிரபல ஸினிமா முதலாளிகள் எடுக்கவில்லை என்பது நம்முடைய திட்டமான கருத்து.

எடுத்திருந்தால் அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் நம்முடைய படங்கள் போயிருக்கும்; நமக்குப் புகழையும் அளித்திருக்கும்.

அப்படிப்பட்ட உயர்தரப் படங்கள் இந்தியாவில் எடுக்கப்படவில்லை என்று ஸினிமாத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களே ஒப்புக் கொள்கிறார்கள்.

மூன்று, நாலு வருஷங்களுக்கு முன்னால்கூட அத்தகைய உயர்தரப் படங்கள் எடுப்பதற்குச் சில முயற்சிகள் வடநாட்டில் செய்யப்பட்டன. இப்போது அதுவும் நின்று போய்விட்டது. வட இந்தியாவில் இப்போதெல்லாம் எடுக்கப்படும் ஹிந்திப் படங்கள் பெரும்பாலும் வெறும் குப்பைகள் என்று சொல்வது மிகையாகாது.

* * *

ருஷியா, அமெரிக்கா முதலிய நாடுகளில் அவர்களுடைய நாட்டையும் நாட்டு மக்களையும் உயர்த்தும் படங்களை எடுக்கிறார்கள் என்று சொன்னோம். இதைப் பற்றிச் சிறிதும் சந்தேகத்துக்கு இடமில்லை என்பதை மீண்டும் வற்புறுத்திச் சொல்கிறோம்.

ருஷியப் படமாகிய "The Fall of Berlin" படத்தில் கதாநாயகன் யார் தெரியுமா! இரும்புத் தொழிற்சாலையில் வேலைசெய்யும் ஒரு தொழிலாளி.

அதுவரைக்கும் ஒரு மணி நேரத்தில் எவ்வளவு இரும்பு உருக்கிப் பதம் செய்தார்களோ அதைக் காட்டிலும் அதிக அளவில் இரும்பு உருக்கிப் பதம் செய்யும் முறையைக் கண்டு பிடிப்பதில் அந்தத் தொழிலாளி வெற்றி யடைகிறான். இதற்காக அவனை வீட்டார் கொண்டாடுகிறார்கள்; நாட்டார் கொண்டாடுகிறார்கள்; சகோதரத் தொழிலாளர் கொண்டாடுகிறார்கள்; அரசாங்கத்தார் கொண்டாடுகிறார்கள். தோழர் ஸ்டாலினே அந்தத் தொழிலாளியை அழைப்பித்துக் கொண்டாடுகிறார்.

இவ்வளவுக்கும் அந்தத் தொழிலாளி என்ன சொல்கிறான் தெரியுமா! "நான் செய்தது ஒன்றும் பிரமாதமில்லை; என்னுடைய தோழர்கள் இதைக் காட்டிலும் அதிக உற்பத்தி செய்து என்னைத் தோற்கடித்துவிடப் போகிறார்கள்!" என்று பெருமிதத்தோடு கூறுகிறான்.

இப்படித் தொழிலை உயர்த்தும் நாட்டில் தொழிலும் வளரும் பெருகுமா. அல்லது "ஐயோ! வேலை செய்ய வேண்டி யிருக்கிறதே!" என்று பிலாக்கணம் பாடிக்கொண்டு வேலை செய்யும் நாட்டில் தொழிலும் வளரும் பெருகுமா என்று நேயர்களே யோசித்துக் கொள்ளலாம்.

இதே தொழிலாளி பின்னால் யுத்தம் வந்தபோது சைன்யத்தில் சேர்ந்து பெர்லின் வரையில் போராடிக் கொண்டு சென்று அந்த நகரைக் கைப்பற்றும் முயற்சியில் பங்கு கொள்கிறான். பெர்லின் பார்லிமெண்டு கட்டடத்தின் மேல் சிகரத்தில் ஏறி ருஷியாவின் வெற்றிக் கொடியை நாட்டுகிறான்!

அவனுடைய காதலி ஜெர்மனியில் ஒரு பயங்கரச் சிறையில் இருக்கிறாள். ருஷிய சைன்யம் நெருங்கி வருகிறது என்று அறிந்ததும் சிறைக் கைதிகளைச் சுட்டுக் கொல்லுவதற்காக ஜெர்மன்











பார்லிமெண்டில் நிதி மந்திரி தேஷ்முக் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தில் புதிய வரி ஒன்றுமில்லாதது தேசமெங்கும் மக்களுக்குத் திருப்தியை அளித்திருக்கிறது.

அதிகாரிகள் வருகிறார்கள். "மரணம் வரும் வரையில் நாம் ஏன் காத்திருக்க வேண்டும்! அதை நாம் எதிர்கொள்வோம்!" என்று கதாநாயகி சொல்லி விட்டுச் சுட வந்தவர்களை எதிர்த்துப் பாய்கிறாள். இந்தக் கடைசி முயற்சியினால் அவள் உயிர் பிழைத்துச் சென்று வெற்றிக் கொண்டாட்டத்துக்கிடையே தன் காதலனை அடைகிறாள்.

இவ்வாறு விடா முயற்சியையும் வீர தீரங்களையும் பெருமைப் படுத்தும் நாட்டின் மக்கள் மேன்மை அடைவார்களா, சோம்பேறி வாழ்விலும் குருட்டு அதிர்ஷ்டத்திலும் ஆசையை வளர்க்கும் தேச மக்கள் முன்னேற்றம் அடைவார்களா?— நேயர்களே தீர்மானித்துக் கொள்ளலாம்.

*　　*　　*

"அமெரிக்கப் படங்கள் எல்லாம் நன்றாயிருக்கின்றனவா! எத்தனையோ மட்டமான படங்கள் வருகின்றனவே!" என்று இந்திய சினிமாப் பிரமுகர் ஒருவர் சமீபத்தில் பேசியிருக்கிறார்.

ஆம்! அமெரிக்காவில் மட்டமான படங்களும் எடுக்கிறார்கள். எடுத்து, உலகில் முட்டாள்கள் எங்கே இருக்கிறார்கள் என்று பார்த்து அந்த மட்டமான படங்களை அனுப்பி வைக்கிறார்கள்!

அவர்களுடைய நாட்டில் அந்த மாதிரி படங்களை மதிப்பதுமில்லை; பாராட்டுவதுமில்லை.

'அகாடமி அவார்டு' முதலிய பல பரிசுகள் நல்ல படங்களுக்காக அமெரிக்காவில் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அந்தப் பரிசுகளை உயர்தரமான படங்களே பெறுகின்றன. அத்தகைய உயர்தரமான படங்கள் வேறுநாடுகளில் பிரபலம் அடைவதில்லை; அடையவும் முடியாது. ஏனெனில் இவற்றை அறிந்து அனுபவிப்பதற்கு அமெரிக்கச் சரித்திரம் தெரிந்திருக்க வேண்டும். அமெரிக்கச் சமூக வாழ்வின் சூழ்நிலை தெரிந்திருக்க வேண்டும்.

ஆகையினாலேயே வெளி நாடுகளில் அவ்வளவாக அப்படங்கள் ஓடுவதில்லை. ஆனால் சர்வதேச விழா போன்ற வைபவங்களுக்கு அத்தகைய உயர்தரப் படங்களையே அமெரிக்கர்கள் அனுப்பி வைப்பார்கள். 'பாதாள பைரவி' 'அவாரா' போன்ற படங்களை அனுப்ப மாட்டார்கள்.

அமெரிக்காவில் வெளியாகும் மட்ட ரகமான படங்களிலேகூட அமெரிக்காவையோ அமெரிக்கர்களையோ தாழ்த்த மாட்டார்கள்.

அமெரிக்கர்கள் முதன் முதலில் அந்நாட்டில் குடியேறிய போதும், பிறகு நாலாபக்கமும் பரவிச் சென்றபோதும் அவர்கள் பட்ட கஷ்டங்களைப் பற்றி விவரிக்கும் ஆயிரக்கணக்கான அமெரிக்கப் படங்கள் வெளியாகியிருக்கின்றன. இவையெல்லாம் சாதாரணப் படங்கள்தான். ஆயினும் அவற்றிலும் கூடச் சாதாரண அமெரிக்கர்களின் விடா முயற்சியும் உழைப்புத் திறனும் அஞ்சா நெஞ்சமும் வீர தீரமும் வெளியாகும். ஒரு முயற்சியில் பல பேர் வீழ்ந்து விட்டாலும் மற்றவர்கள் சோர்வடைந்து விட்டு விட மாட்டார்கள். இன்னும் பலர் உடனே முன்வந்து தொடங்கிய காரியத்தை நிறைவேற்றியே தீருவார்கள்.

அமெரிக்க நாட்டுப் படங்கள் எல்லாவற்றிலும், அவை உயர்தரப் படமாயினும் மட்டரகப் படமாயினும், அமெரிக்கர்களின் தன் முயற்சியும் ஊக்கமும் அஞ்சா நெஞ்சமும் சளியா உழைப்பும் சித்திரிக்கப்படுவதைக் காணலாம்.

*　　*　　*

இனி, "சம்சாரம்" "பாதாள பைரவி" என்னும் படங்களுக்கு வருவோம்.

"சம்சாரம்" என்னும் படத்தின் வெற்றியின் புகழோ அல்லது இகழோ ஜெமினி நிர்வாகிகளைச் சேர்ந்ததல்ல என்பதைக் குறிப்பிட விரும்புகிறோம்

"சம்சாரம்" முதலில் தெலுங்கில் வெளியான படம். பல்லாவரம் சினிமாக் கொட்டகையில் அது பதினெட்டு வாரத்துக்கு மேல் ஓடிற்று. சென்னையிலிருந்து ஆயிரக் கணக்கானவர்கள் போய்ப் பார்த்து வந்தார்கள். குதிரைப் பந்தய தினங்களில் கிண்டிக்குப் போகும் கூட்டத்தைப் போல் பல்லாவரத்துக்குக் கூட்டம் போய் வந்தது.

ஜெமினி நிர்வாகிகள் அதைத் தமிழிலும் ஹிந்தியிலும் எடுப்பதற்கு முன்பே 'சம்சாரம்' மகத்தான வெற்றி பெற்றுவிட்டது!

ஜெமினி அதிபர் மக்களின் மனோபாவத்தை அறிவதில் நிபுணர். ஆகையால் நமது நாட்டு நடுத்தர மக்களின் தற்போதைய நிலையில் "சம்சாரம்" பெரிய வெற்றியடையும் என்று கண்டார். மக்களின் மனோபாவம் தென்னாட்டிலும் ஒன்றுதான், வடநாட்டிலும் ஒன்றுதான் என்று அறிந்திருந்தார். ஆகையால் படத்தைக் காட்சி காட்சியாக அப்படியே தெலுங்கிலிருந்து எடுத்துத் தமிழிலும் ஹிந்தியிலும் கொண்டு வந்தார். அந்தப் படங்களும் 'மகத்தான' வெற்றி அளித்தன. ஆனால் அந்த வெற்றிக்காக அவரைப் பாராட்டுவதற்கும் இல்லை; குறை கூறுவதற்கு மில்லை.

படத்தின் வெற்றிக்குக் காரணம் என்ன என்பதைப் பற்றித்தான் ஆராய வேண்டும்.

"சம்சாரம்" படத்தின் கதாநாயகனுடைய மனோ நிலையை நம் நடுத்தர வகுப்பாரில் பெரும் பாலோர் இப்போது அடைந்திருக்கிறார்கள்.

வியாதிகளுக் கெல்லாம் பெரும் வியாதி மனச் சோர்வு என்னும் வியாதி. அது நம்மவர்களை இப்போது பெரிதும் பிடித்திருக்கிறது.

குடும்ப பாரத்தைத் தாங்க முடியவில்லை; வாழ்க்கைப் போராட்டத்தில் சலிப்பு ஏற்பட்டு விட்டது. 'எல்லாத் தொல்லைகளையும் விட்டு எங்கேயாவது ஓடிப் போய் விடலாமா!' என்பது நம் நடுத்தர வகுப்பாரில் அநேகருடைய அடி மனதில் மறைந்து கிடக்கும் எண்ணம்.

இதைச் "சம்சாரம்" படம் கிளப்பித் தூண்டி விடுகிறது. அதன் கதாநாயகனிடம் அனுதாபம் கொள்ளச் செய்கிறது. "ஐயோ! பாவம்!" என்று கண்ணீர் வடிக்கும்படியும் செய்கிறது.

நம்முடைய என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர்கள் சில காலத்துக்கு முன்பு தங்களுடைய சம்பள உயர்வைக் கோரிக் கடவுளுக்குப் பிரார்த்தனை செலுத்துவதென்று தீர்மானித்தார்கள்!

இப்போது சில காலமாக என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர்களின் மனைவிமார் சங்கம் அமைத்தும் கூட்டம் கூடியும் தங்களுடைய குடும்ப நிலையை உயர்த்துவதற்கு முன்வந்திருக்கிறார்கள்.

"சம்சாரம்" படம் தூண்டிவிடும் மனோநிலையை ஒரளவில் இச் செய்திகள் பிரதிபலிக்கின்றன.

பொதுவாக, மனச் சோர்வு என்னும் வியாதி நம்மவர்களைப் பிடித்திருக்கிறது.

"சம்சாரம்" என்னும் படம் அந்த வியாதியைத் தூண்டி அதிகமாக்குகிறது.

ஒருவன் வாழ்க்கைப் போராட்டத்தில் மனம் சோர்ந்து நிராசையடைந்து ஓடிப்போனான் என்று காட்டி, இன்னொருவன் அதே சமயத்தில் ஊக்கத்தினாலும் உழைப்பினாலும் வெற்றி யடைந்ததையும் காட்டியிருந்தால், ஒரு வேளை வியாதியைத் தூண்டிவிட்டு மருந்தும் கொடுப்பதாயிருக்கலாம்.

இந்தப் படம் வியாதியை மட்டுந்தான் கிளப்பி விடுகிறது; மருந்து கொடுக்கவில்லை.

கதாநாயகி ஒரு பணக்காரனுடைய மண்டையில் அடித்துப் பணத்தைத் திருடி, ஒரு டாக்டரின் குரல் வளையைப் பிடித்துப் பயமுறுத்திய பிறகு கதாநாயகனுடைய உடல் வியாதி குணமாகிறது. ஆனால் அவனுடைய மனச் சோர்வு என்னும் பெரும் வியாதியை எந்த மருந்து குணப்படுத்தியது என்று தெரியவில்லை.

"பாதாள பைரவி" என்னும் படம் ஏற்கனவே தெலுங்கிலும் தமிழிலும் வெளி வந்து வெற்றி கண்டுவிட்ட படம்! ஹிந்தியிலும் அது வெற்றி அடையத்தான் போகிறது! நாம் இங்கே எழுதும் அபிப்பிராயத்தினால் அதன் வெற்றிக்கு ஒரு குறைவும் நேரப் போவதில்லை.

ஆனாலும் அது நமது நாட்டையோ நம் மக்களையோ உயர்த்தும் படம் அல்ல என்று வற்புறுத்திச் சொல்லுகிறோம்.

அயல்நாட்டார் முன்னால் நாம் பெருமையுடன் காட்டக்கூடிய படமும் அல்லவே அல்ல.

அது நம் நாட்டையும் நம் பண்பாட்டையும் பாதாளத்தில் தள்ளும் படந்தான்.

* * *

இந்தியா தேசத்தின் உயர்ந்த பண்பாட்டைச் சித்தரிக்கும் படங்கள், நம் சுதந்திரப் போராட்டத்தின் மகிமையை எடுத்துக் காட்டும் படங்கள், உயர்ந்த இலட்சியங்களை யுடைய படங்கள், உழைப்பின் பெருமையை உயர்த்தும் படங்கள், தன்னம்பிக்கையை வளர்க்கும் படங்கள், அயல் நாடுகளுக்கு நாம் பெருமிதத்துடன் அனுப்பிவைக்கக்கூடிய படங்கள்,—இத்தகைய படங்கள் நம் சென்னை ஸ்டுடியோக்களில் எடுக்கப்பட்டு வெளி வரும் போது அந்தப் படங்களையும் அவற்றை எடுக்கும் பேசும்பட முதலாளிகளையும் நாம் மனமுவந்து பாராட்டக் காத்திருக்கிறோம். அத்தகைய 'படங்கள் வெளி வராத வரையில், "வரவில்லை" என்பதை அடிக்கடி ஞாபகப் படுத்திக் கொண்டிருப்பது நம் கடமையாகும்.

## அட்டைப்பட விளக்கம்

சரயு வாம்நதி தாய்முலை அன்னதால்
உரவு நீர்நிலத்து ஓங்கும் உயிர்க்கெலாம் — கம்பர்

நம் கிராமங்களில் ஆறுள்ள இடங்களில் ஆற்றுக்கும், குளமுள்ள இடங்களில் குளத்துக்கும் பெண்கள் இடுப்பில் குடத்தை ஏந்திச் சென்று தண்ணீர் எடுக்கும் காட்சி மிக மனோரம்மியமான காட்சி.

காலை மாலை நேரங்களில் வான முகட்டில் தோன்றும் செக்கர் புறப்படலமாக அமைய, வண்ண வண்ணச் சேலைகள் உடுத்தி, மழலை மொழியும் வளைகள் குலுங்க, கலகல வென்று சிரித்துப்பேசிச் சகிமாருடன் பெண்கள் செல்லும் காட்சி யாரையும் பரவசப் படுத்தும்.

நம் முன்னோர்களும் பெண்கள் நீர் நிலைக்குச் செல்லும் காட்சியை அனுபவித்தார்கள். நீர் நிலைக்குச் செல்லும்போது அவர்கள் வம்பளக்கும் பேச்சு பரமனைப் பற்றியதாக இருக்கட்டும் என்று கருதினார்கள். அதன் விளைவாக தமிழில் திருப்பாவை, திருவெம்பாவை முதலிய அற்புதப் பிரபந்தங்கள் எழுந்தன. சமீபத்தில் கூட தமிழ் நாட்டில் பல பகுதிகளில் திருப்பாவை—திருவெம்பாவை மகாநாடுகள் வெகு சிறப்பாக நடந்தேறின.

ஆனால் இந்த இதழ் அட்டையைப் பார்க்கும் போது சித்தூர், வட ஆற்காடு முதலிய சில ஜில்லா வாசிகளுக்கு விசித்திரமாகத் தோன்றலாம், அந்த ஜில்லாக்களில் தண்ணீர் ஒரு சொட்டுக் கூட இல்லையே என்று. அந்த ஜில்லாக்களிலும் இறைவன் அருளால் வான மழை பொழிந்து கூடிய விரையில் இந்த அட்டையில் காணும் காட்சி, வாழ்க்கையில் காணும் காட்சியாக மாறப் பிரார்த்திக்கிறோம்.

# பொன்னியின்




## அத்தியாயம் 12

## "தீயிலே தள்ளு!"

கொல்லன் சிறிது நேரம் தன் வேலையிலேயே கவனமாயிருந்தான். வந்தியத் தேவன் இரண்டு மூன்று தடவை கனைத்த பிறகு நிமிர்ந்து பார்த்தான்.

"யார், அப்பனே, நீ! உனக்கு என்ன வேண்டும்? வாள், வேல் ஏதாவது வேண்டுமா? வாளுக்கும் வேலுக்குந் தான் இப்போதெல்லாம் தேவையில்லாமல் போய் விட்டதே? நீ வாளுக்கு எங்கே வந்திருக்கப் போகிறாய்?" என்றான் கொல்லன்.

"என்ன ஐயா, இவ்வாறு சொல்கிறீர்? உம்முடைய கையில் வாளை வைத்து வேலை செய்து கொண்டே வாளுக்குத் தேவையில்லையென்கிறீரே?" என்றான் வந்தியத் தேவன்.

"இது ஏதோ அபூர்வமாக வந்த வேலை; பழைய வாளைச் செப்பனிடுவதற்காகக்

# ன் செல்வன்




கொண்டு வந்தார்கள். சில வருஷங்களுக்கு முன்னால் பாண்டிய நாட்டுப் போரும் வடபெண்ணைப் போரும் நடந்து கொண்டிருந்தபோது இந்தப் பட்டறையில் மலைமலையாக வேலும் வாளும் குவிந்திருக்கும். இலங்கை யுத்தம் ஆரம்பமான புதிதில் கூட ஆயுதங்களுக்குக் கிராக்கி யிருந்தது. இப்போது வாளையும் வேலையும் கேட்பாரில்லை. பழைய வாள்களையும் வேல்களையும் என்னிடம் கொண்டு வந்து விற்பதற்காக வருகிறார்கள். நீகூட அதற்காகத்தான் ஒரு வேளை வந்தாயா, என்ன?"

"இல்லை; இல்லை! இன்னும் சில காலத்துக்கு எனக்கு வாள் தேவையாயிருக்கிறது. ஒப்புக் கொண்ட வேலையை முடித்து விட்டால், அப்புறம் கையில் தாளத்தை எடுத்துக் கொண்டு தேவாரம் பாடிக் கொண்டு சிவ ஸ்தல யாத்திரை புறப்படுவேன். அப்போது வேணுமானால் என் ஆயுதங்களை உம்மிடமே கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்."

"பின்னே, இப்போது எதற்காக என்னைத் தேடி வந்தாய்?"

"என்னுடைய குதிரையைக் காட்டிலும் மேட்டிலும் விட்டுக் கொண்டு வந்தேன். இன்னும் வெகு தூரம் போயாக வேண்டும். குதிரைகளின் கால் குளம்புக்கு இரும்புக் கவசம் போடுவதாமே? அது உம்மால் முடியுமா?"

"ஆம்; அரேபியா தேசத்தில் அப்படித்தான் வழக்கம். இங்கேயும் சிலர் இப்போது குதிரைக் குளம்புக்கு இரும்பு லாடம் அடிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். எனக்கும் கொஞ்சம் அந்த வேலையில் பழக்கம் உண்டு."

"என் குதிரைக்கு லாடம் போட்டுத் தருவீரா?"

"அதற்கு நேரம் அதிகம் பிடிக்கும். கையில் உள்ள வேலையை முடித்து விட்டுத்தான் உன் வேலையை எடுத்துக் கொள்ள முடியும்."

வந்தியத் தேவன் யோசித்தான். அவனுக்கும் களைப்பாயிருந்தது. குதிரையும் கஷ்டப்பட்டுப் போயிருந்தது. சிறிது நேரம் காத்திருந்து அதன் குளம்புகளுக்குக் கவசம் போட்டுக் கொண்டே போவது என்று முடிவு செய்தான்.

"கை வேலை முடியும் வரையில் காத்திருக்கிறேன். அப்புறமாவது உடனே செய்து தருவீர் அல்லவா?"

"அதற்கென்ன, ஆகட்டும்!"

வந்தியத்தேவன் சற்று நேரம் கொல்லன் காய்ச்சிச் செப்பனிட்ட வாளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"இந்த வாள் அபூர்வமான வேலைப்பாடு அமைந்ததாயிருக்கிறதே? இராஜகுலத்து வாள்மாதிரி அல்லவா இருக்கிறது? இது யாருடைய வாள்?" என்றான்.

"அப்பனே! இங்கிருந்து கொஞ்ச தூரத்தில் அரிச்சந்திர நதி என்று ஓர் ஆறு ஓடுகிறது."

"நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அதனால் என்ன?"

"நான் அரிச்சந்திர நதிக்குச் சென்று அடிக்கடி தலை முழுகி வருவது வழக்கம்."

"மிக்க நல்ல காரியம். போகும் இடத்துக்குப் புண்ணியம்."

"ஆகையால் கூடியவரையில் மெய்யே சொல்லுவதென்றும் பொய் சொல்லுவதில்லையென்றும் வைத்துக் கொண்டிருக்கிறேன்."

"அதற்கு என்ன ஆட்சேபம்? உம்மை யார் பொய் சொல்லச் சொன்னது? நான் சொல்லவில்லையே?"

"நீ என்னை இந்த வாளைப் பற்றி ஒன்றும் கேள்வி கேட்காமலிருந்தால் நானும் பொய் சொல்லாமலிருக்கலாம்!"

ஓஹோ! அப்படியா சமாசாரம்?— என்று வந்தியத் தேவன் மனதிற்குள் எண்ணிக் கொண்டான்.

"நான் கேள்வியும் கேட்கவில்லை. நீர் விரத பங்கமும் செய்ய வேண்டாம். கை வேலையைச் சீக்கிரம் முடித்துவிட்டு என் வேலையை எடுத்துக் கொண்டு செய்து கொடுத்தால் போதும்!"

கொல்லன் மௌனமாகத் தன் வேலையில் கவனம் செலுத்தினான்.

வந்தியத் தேவன் வாளைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அதன் அடிப் பகுதியில், பிடியின் பக்கத்தில், மீன் உருவம் பொறிக்கப்பட்டிருப்பதைப் பார்த்து வியந்தான். மீன் உருவம் எதற்காக? அதற்கு ஏதேனும் பொருள் உண்டா! வெறும் அலங்காரத்துக்குத்தானா?

கொல்லன் அந்த மீன் உருவம் உள்ள இடத்தை மறுபடியும் தீயில் காட்டிக் காய்ச்சி அதன்பேரில் சுத்தியால் அடித்தான். மீன் உருவம் தெரியாமல் மறைப்பதுதான் அவனுடைய நோக்கம் என்று தோன்றியது.

எதற்காக இந்தக் காரியம் என்று வல்லவரையன் யோசனை செய்தான். யோசனை செய்து கொண்டிருந்தபோதே, அவன் கண்கள் சுழலத் தொடங்கின. பல நாளாக அவனால் விரட்டியடிக்கப் பட்டு வந்த நித்திரா தேவி இப்போது தன் மோக மாயவலையை அவன் பேரில் பலமாக வீச ஆரம்பித்தாள். வந்தியத்தேவன் அதிலிருந்து தப்ப முடியவில்லை. சிறிது நேரம் உட்கார்ந்தபடியே ஆடி விழுந்தான். பிறகு அப்படியே, கொல்லன் உலைக்குப் பக்கத்தில், படுத்துத் தூங்கிப் போனான்.

தூக்கத்தில் வல்லவரையன் பல பயங்கரக் கனவுகள் கண்டான். கத்தியைப் பற்றியே ஒரு கனவு. ஒருவன் வந்து கொல்லனிடம் கத்தியைத் திரும்பக் கேட்டான். கொல்லன் கொடுத்தான். "என்ன கூலி வேண்டும்?" என்று அவன் கேட்டான். "கூலி ஒன்றும் வேண்டாம். பழுவூர் இளைய ராணிக்கு நான் அளிக்கும் காணிக்கையாயிருக்கட்டும்" என்றான் கொல்லன்.

"ஜாக்கிரதை! இந்த விஷயம் யாருக்கும் தெரியக் கூடாது. முக்கியமாக, பழுவூர் இளைய ராணியின் பெயரைச் சொல்லவே சொல்லாதே! சொன்னால் என்ன செய்வோம் தெரியுமா?......"

"நான் எதற்காக ஐயா, பழுவூர் ராணியின் பெயரைச் சொல்லப் போகிறேன்? ஒருவரிடமும் சொல்ல மாட்டேன்."

"இதோ இங்கே யாரோ ஒரு வாலி பன் படுத்திருக்கிறானே! சத்தம் போட்டுப் பேசுகிறாயே?"

"அவன் ஆழ்ந்த நித்திரையில் இருக்கிறான். இடி இடித்தாலும் அவனுக்குக் காது கேட்காது."

"ஒருவேளை அவனுக்குத் தெரிந்து விட்டது என்று தோன்றினால், இந்த உலைக் களத்தின் நெருப்பில் அவனைத் தூக்கிப் போட்டு வேலை தீர்த்து விடு!"

இந்தச் சம்பாஷணையின் முடிவில் கொல்லனும் கத்திக்கு உடையவனும் வந்தியத்தேவனை இழுத்துப் போய் உலைக் களத்தில் போடப் போவதாக வந்தியத்தேவன் கனவு கண்டான். பிறகு அந்தக் கனவு மாறியது.

**வ**ந்தியத்தேவனை யம தூதர்கள் நரகத்துக்கு அழைத்துச் சென்றார்கள். யம தர்மராஜன் பூலோகத்தில் வந்தியத்தேவனுடைய நடவடிக்கைகளைப் பற்றி விசாரித்தான். "பொய் சொல்வதில் இவன் நிபுணன்; எத்தனை பொய்தான் சொல்லியிருக்கிறான் என்பதற்கு அளவே கிடையாது" என்றான் சித்திரகுப்தன், கையிலிருந்த ஓலையைப் பார்த்து விட்டு.

"இல்லை, இல்லை! எல்லாம் சக்கரவர்த்தி குடும்பத்தாரின் சேவையிலே தான் சொன்னேன். எடுத்த காரியத்தைச் செய்து முடிப்பதற்காகச் சில பொய்களைச் சொன்னேன்."

"எதற்காகச் சொல்லியிருந்தாலும் பொய் பொய்தான். தள்ளுங்கள் இவனை நரகத்தின் பெரிய நெருப்புக் குழியில்!" என்றான் யமன். உடனே நரகத்தின் உட்புறத்திலிருந்து நூறாயிரம் குரல்கள் பயங்கரமாக ஊளையிட்டன.

யம தூதர்கள் அவனை அழைத்துப் போனார்கள். பயங்கரமாகக் கொழுந்து விட்டெரிந்த பெரு நெருப்பில் அவனைத் தள்ளுவதற்கு ஆயத்தம் செய்தார்கள். அந்த யம தூதர்கள் இருவரையும் பார்த்தால், முகங்கள் பழுவேட்டரையர்களின் முகங்களைப் போலிருந்தன. அதைப் பற்றி அவன் திடுக்கிட்டு நிற்கையில் குந்தவை தேவி அங்கே வந்தாள். "என்னுடைய கட்டளையை நிறைவேற்றுவதற்காகவே அவர் பொய் சொன்னார். ஆகையால் அவருக்குப் பதிலாக என்னை நெருப்பிலே போடுங்கள்!" என்று கூறினாள்.

இந்தச் சமயத்தில் நந்தினி தேவியும் அங்கே எப்படியோ வந்து சேர்ந்தாள். "இரண்டு பேரையுமே சேர்த்து நெருப்பிலே போட்டு விடுங்கள்!" என்றாள் அந்தப் புண்ணியவதி. யம தூதர்கள் அவர்கள் இருவரையும் பிடித்து நெருப்பில் தள்ளப் போனார்கள். "ஐயோ! வேண்டாம்!" என்று வந்தியத்தேவன் அலறிக்கொண்டு திமிறினான்; கண் விழித்து எழுந்து உட்கார்ந்தான். கண்டது கனவு என்ற எண்ணம் ஆறுதல் கொடுத்தது. ஆனால் எல்லாம் உண்மையாக நடந்தது போலவே தோன்றியபடியால் அவன் உடம்பு இன்னும் நடுங்கிக் கொண்டிருந்தது.

சேச்சே! இனிமேல் எக்காரணத்துக்காகவும் பொய் சொல்லக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

"ரொம்ப நேரம் தூங்கிப் போய்விட்டேனா?" என்று கொல்லனைப் பார்த்துக் கேட்டான்.

"அப்படி ரொம்ப நேரம் ஆகிவிடவில்லை. இரண்டு ஜாமந்தான். அப்பனே! நீ கும்பகர்ணன் வம்சத்தில் வந்தவனோ? பட்டப்பகலில் இப்படித் தூங்குகிறாயே? இரவிலே எப்படித் தூங்க மாட்டாய்?" என்றான் கொல்லன்.

"கடவுளே! இரண்டு ஜாம நேரமா தூங்கி விட்டேன்? குதிரைக் குளம்புக்குக் கவசம் செய்தாகி விட்டதா?"

"இனிமேல்தான் செய்ய வேண்டும். ஆனால் உன்னைப் போன்ற தூங்கு மூஞ்சிக்கு அதனால் என்ன பயன்? நீ குதிரையையே பறி கொடுத்து விடுவாய்! இன்னும், உன்னையே கூடப் பறி கொடுத்து விடுவாய்!"

**வ**ந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் மனதில் ஒரு சந்தேகம் உதித்தது. எழுந்து ஓடிப்போய் வாசற்பக்கம் பார்த்தான். குதிரையை நிறுத்திய இடத்தில் அதைக் காணோம்.

"ஐயோ! குதிரை எங்கே?" என்று இரைச்சல் போட்டுக் கொண்டே உடைவாளின் பிடியில் கை வைத்தான்.

"பயப்படாதே! உன் குதிரை பத்திரமா யிருக்கிறது. கொல்லைப்புறத்தில் போய்ப் பார்!"

வந்தியத் தேவன் கொல்லைப் புறம் சென்று பார்த்தான். அங்கே மூன்று பக்கம் அடைக்கப்பட்ட கீத்துக் கொட்டகையில் அவனுடைய குதிரை நின்று கொண்டிருந்தது. கொல்லன் உலைக்களம் ஊதிய சிறுபிள்ளை அதன் வாயில் புல் கொடுத்துக் கொண்டிருந்தான். வந்தியத்தேவனைப் பார்த்ததும் குதிரை உடலைச் சிலிர்த்துக் கொண்டு கனைத்தது.

"ஐயா! இங்கே வந்து கொஞ்சம் உங்கள் குதிரையைப் பார்த்துக் கொள்

ளுங்கள். இதன் குளம்புகளுக்கு அளவு எடுக்க வேண்டும்!'' என்ருன் பையன்.

வந்தியத் தேவன் குதிரை அருகில் சென்று அதைத் தடவிக் கொடுத்துக் கொண்டு நின்ருன்.

பையன் குதிரையின் குளம்புக்கு அளவு எடுத்தான்.

'' இதை யார் இங்கே கொண்டு வந்து கட்டினர்கள்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

'' நான்தான் கட்டினேன்.''

'' எதற்காக?''

''அப்பா கட்டச் சொன்னர்.''

''அது எதற்காக?''

'' இந்த ஊர்வழியாகச் சற்று முன்னல் பெரிய பழுவேட்டரையரும் அவர் பரிவாரங்களும் போனர்கள். குதிரையை வாசலில் பார்த்திருந்தால் கட்டாயம் கொண்டு போயிருப்பார்கள்.''

வந்தியத்தேவனுக்குப் பழைய ஞாபகம்,—திருநாராயணபுரத்து ஞாபகம்,—வந்தது. தான் செய்த தவறை எண்ணி வெட்கம் அடைந்தான். கொல்லனிடமும் அவன் மகனிடமும் மனத்திற்குள் நன்றி உணர்ச்சி கொண்டான்.

குதிரையின் குளம்புக்கு அளவு எடுத்துக் கொண்டதும் இருவரும் உலைக் களத்துக்குள் வந்தார்கள்.

கொல்லன் இரும்புத் துண்டை எடுத்துக் குளம்பைப் போல் வளைத்து வேலை செய்யத் தொடங்கினன்.

'' என் குதிரையைக் காப்பாற்றிக் கொடுத்தீரே? அதற்காக மிக்க வந்தனம்'' என்ருன் வல்லவரையன்.

'' என்னைத் தேடி வருகிறவர்களுடைய உடைமையை நான் காப்பாற்றிக் கொடுக்க வேண்டுமல்லவா? அது என் கடமை.''

'' பழுவேட்டரையர் பரிவாரம் இந்தப் பக்கம் போய் எத்தனை நேரம் இருக்கும்?''

'' இரண்டு நாழிகைக்கு மேலேயிருக்கும். அவ்வளவு ஆர்ப்பாட்டத்துக்கும் நீ தூங்கிக் கொண்டிருந்தாயே, அதை நினைத்தால் தான் எனக்கு வியப்பாக இருக்கிறது.''

''நான்தான் தூங்கிப் போய்விட்டேன். இத்தனை நேரம் நீர் வீணுக்கி விட்டீரே? அவர்கள் போன பிற்பாடாவது வேலை உடனே ஆரம்பித்திருக்கலாமே?''

'' எப்படி ஆரம்பிப்பது? அவர்கள் கொண்டு வந்த செய்தியைக் கேட்ட பிறகு யாருக்கு வேலை செய்ய மனம் வரும்? உனக்காக மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு இதை நான் செய்கிறேன். எங்கிருந்து அப்பனே, நீ வருகிருய்?''

அவர்கள் கொண்டு வந்த செய்தி என்னவாயிருக்கும் என்று யோசித்துக் கொண்டே வந்தியத் தேவன், '' இலங்கையிலிருந்து வருகிறேன்'' என்ருன்.

கொல்லன் அவனுடைய முகத்தை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு குரலைத் தாழ்த்திக் கொண்டு ''இலங்கையில் இருந்தபோது இளவரசர் அருள்மொழி வர்மரைப் பார்த்தாயா?'' என்ருன்.

உண்மையே சொல்லுவதென்று சற்று முன்பு சங்கல்பம் செய்து கொண்டிருந்த வந்தியத்தேவன் ''பார்த்தேன்'' என்ருன்.

'' கடைசியாக அவரை நீ எப்போது பார்த்தாய்?''

'' இன்று காலையில் பார்த்தேன்.''

கொல்லன் வந்தியத் தேவனைக் கோபமாய் நோக்கினன்.

'' விளையாடுகிருயா, தம்பி!''

''இல்லை, ஐயா, உண்மையைத்தான் சொன்னேன்.''

'' இளவரசர் இப்போது எங்கேயிருக்கிருர் என்றுகூடச் சொல்வாய் போலிருக்கிறதே!''

'' ஓ! கேட்டால் சொல்லுவேன்!''

'' இளவரசர் எங்கே இருக்கிருர்? சொல் பார்க்கலாம்.''

'' நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கிருர்!''

'' அப்பனே! நானும் எத்தனையோ பொய்யர்களைப் பார்த்திருக்கிறேன். உன்னைப் போல் கட்டுக் கதை புனைந்துரைக்கக் கூடியவர்களைப் பார்த்ததே யில்லை.''

வந்தியத்தேவன் தன் மனத்திற்குள் சிரித்துக் கொண்டான். புனைந்து கூறும் பொய்யை நம்புவதற்கு எல்லாரும் ஆயத்தமாயிருக்கிருர்கள். உண்மையைச் சொன்னல் நம்ப மறுக்கிருர்கள். இது நமது ஜாதக விசேஷம் போலும்!

'' தம்பி! நீ இலங்கையிலிருந்து எப்போது புறப்பட்டாய்?''

'' நாலு நாளைக்கு முன்னல்!''

'' அதனலேதான் உனக்குச் செய்தி தெரியவில்லை.''

'' என்ன செய்தி, ஐயா!''

''பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டு விட்டது என்ற செய்திதான்!''

வந்தியத்தேவன் கஷ்டப்பட்டுத் திடுக்கிடுவது போல் பாசாங்கு செய்தான்.

'' ஐயோ! அப்படியா? யார் சொன்னர்கள்!''

''நேற்று முதல் இங்கெல்லாம் அப்படிப் பேச்சா யிருந்தது. இன்றைக்குப் பழுவேட்டரையர் இவ்வழியாகப் போன போது ஊர்த் தலைவர்கள் அவரைக்

கேட்டார்கள். அந்தச் செய்தி உண்மை தான் என்று பழுவேட்டரையர் கூறினார். அந்தச் சண்டாளப் பாவியின் தலையில் இடி விழவில்லையே!"

"ஏன் அந்தக் கிழவரை வைகிறாய்?"

"அவராலேதான் இது நடந்திருக்கிறது. ஏதோ சூழ்ச்சி செய்து இளவரசரை அவரே கடலில் மூழ்க அடித்து விட்டார் என்று ஊரார் சொல்லுகிறார்கள். அதனால் அவருக்காக ஏற்பாடு செய்திருந்த உபசாரங்களையும் நிறுத்தி விட்டார்கள்."

"இளவரசர் மீது இந்த ஊராருக்கு அவ்வளவு பிரியமா?"

"கேட்க வேண்டுமா? ஊர் மக்கள் அவ்வளவு பேரும் இப்போது கண்ணீரும் கம்பலையுமா யிருக்கிறார்கள். இந்த ஊரார் மட்டும் என்ன? சோழ நாடு முழுவதும் ஓலமிட்டு அழப் போகிறது. பழுவேட்டரையர்களைச் சபிக்கப் போகிறது. ஏற்கெனவே, சக்கரவர்த்தி நோய் வாய்ப்பட்டிருக்கிறார். இந்தச் செய்தி கேட்டு என்ன பாடு படுவாரோ தெரியாது. இன்னும் என்னவெல்லாம் விபரீதங்கள் நடக்குமோ? சில நாளாக வானத்தில் தூமகேது தோன்றி வருகிறதே? அதற்கு ஏதேனும் நடந்து தானே தீர வேண்டும்?"

நடக்கக் கூடிய விபரீதங்கள் என்னவாயிருக்கக் கூடும் என்று வந்தியத்தேவன் எண்ணிப் பார்த்தான். தான் கூறியதை இந்தக் கொல்லன் நம்பாமலிருந்ததே நல்லதாய்ப் போயிற்று. தான் இனிமேல் பொய் சொல்லா விட்டாலும் இளவரசரைப் பற்றிய உண்மையைச் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. இளைய பிராட்டி ஏதோ முக்கிய காரணத்திற்காகத்தானே அவரைச் சூடாமணி விஹாரத்தில் இருக்கச் சொல்லியிருக்கிறார்! இளவரசியைக் கண்டு பேசிய பிறகு, அவர் சொல்லும் யோசனைப்படி நடந்து கொள்ள வேண்டும்.

"தம்பி! என்ன யோசிக்கிறாய்?" என்றான் கொல்லன்.

"நடுக்கடலில் சுழற்காற்றில் நானும் அகப்பட்டுக் கொண்டேன். கடவுள் அருளால் நான் தப்பிப் பிழைத்ததை நினைத்துப் பார்த்துக் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன்."

"கடவுள் அருள் என்பது ஒன்று இருக்கிறதா, என்ன?"

"பெரியவரே! அது என்ன அப்படிச் சொல்லுகிறீர்?"

"கடவுள் அருள் என்பதாக ஒன்று இருந்தால் பழுவேட்டரையர்களின் அக்கிரமங்கள் இன்னும் நடந்து கொண்டிருக்குமா? பொன்னியின் செல்வர் கடலில் மூழ்கியிருப்பாரா?"

"பெரியவரே! பழுவேட்டரையர்கள் அதிகாரத்தில் உள்ளவர்கள். அவர்களைப் பற்றி இப்படியெல்லாம் பேசலாமா? யார் காதிலாவது விழுந்தால்? கொஞ்சம் ஜாக்கிரதையா யிருங்கள்."

"என்னை விட நீதான் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். நானாவது விழித்துக் கொண்டிருக்கும் போது பேசுகிறேன். நீ தூக்கத்திலே உளறுகிறாய்!"

"ஐயையோ! என்ன உளறினேன்?"

"பழுவேட்டரையர்களை யமதூதர்கள் என்று சொன்னாய். பழுவூர் இளைய ராணியைப் பெண் பேய் என்று சொன்னாய். நீ சொன்னது என்னமோ உண்மைதான். ஆனால் என்னைத் தவிர வேறு யார் காதிலாவது விழுந்தால் உன் கதி என்ன? நீ அப்படிப் பிதற்றிக் கொண்டிருக்கிற சமயத்திலேதான் இந்தச் சாலை வழியாகப் பழுவேட்டரையர்களின் பரிவாரங்கள் போயின. எனக்கு ரொம்பத் திகிலாய்ப் போய் விட்டது."

"நீர் என்ன செய்தீர்?"

"வாசற்பக்கம் போய் நின்று இந்த உலைக் களத்தின் கதவையும் சாத்திக் கொண்டேன். அதற்கு முன்னால் உன் குதிரையைக் கொல்லைப்புறம் கொண்டு போய்க் கட்டியாயிற்று."

"தூக்கத்தில் நான் இன்னும் ஏதாவது உளறினேனா?"

"உளறலுக்குக் குறைவே யில்லை."

"ஐயோ! என்ன உளறினேன்?"

"நீ இளவரசரைப் பழையாறைக்கு வரும்படி வற்புறுத்தினாய். அவர் பழுவேட்டரையர் கட்டளைப்படி சிறைப்படுவேன் என்றார். இன்னும் என்னவெல்லாமோ சொன்னாய், தம்பி! பழையாறை இளைய பிராட்டியைக் குறித்துக் கூட ஏதேதோ சொன்னாய். ஜாக்கிரதை, அப்பனே, ஜாக்கிரதை!"

வந்தியத்தேவன் வெட்கித் தலை குனிந்தான். இளைய பிராட்டியைக் குறித்து அனுசிதமாக ஏதாவது பேசி விட்டோமா என்று பீதி அடைந்தான். இனிமேல் தூங்குவதாயிருந்தால் தனி அறையில் கதவைத் தாளிட்டுக் கொண்டு தூங்க வேண்டும். அல்லது மனித சஞ்சாரம் இல்லாத காட்டிலோ, பாலைவனத்திலோ, மலைக் குகையிலோ தூங்க வேண்டும்.

"தம்பி! சுழற் காற்றில் நீ எப்படி அகப்பட்டுக் கொண்டாய்? எப்படித் தப்பிப் பிழைத்தாய்?"

"நான் ஏறி வந்த கப்பலில் இடி விழுந்து கடலில் முழுகி விட்டது. முறிந்த பாய் மரத்தைப் பிடித்துக் கொண்டு வெகு நேரம் மிதந்தேன். பிறகு ஓடக்காரப் பெண் ஒருத்தியின் உதவியால் தப்பிக் கரையேறினேன்."

"இளவரசரும் ஒரு வேளை அவ்விதம் தப்பிப் பிழைத்திருக்கலாம் அல்லவா?"

"கடவுள் சித்தமிருந்தால் தப்பிப் பிழைத்திருக்கலாம்."

"நேற்றிரவு நீ எங்கே தங்கினாய்?"

"கோடிக்கரையிலேதான். கடற்கரையோரத்தில் பழுவேட்டரையர் பரிவாரங்கள் ஒரே கூட்டமாயிருந்தது. ஆகையால் குழகர் கோவிலில் சிறிது நேரம் படுத்துத் தூங்கினேன். பொழுது விடிவதற்குள் புறப்பட்டு விட்டேன்."

"அதனால்தான் உனக்கு இளவரசர் செய்தி தெரியவில்லை போலிருக்கிறது."

"நீர் தெரியப் படுத்தியதற்காக வந்தனம். ஐயா! நான் பழையாறைக்குக் கூடிய சீக்கிரம் போக வேண்டும். பழுவேட்டரையரின் பரிவாரத்திடம் சிக்காமல் போக வேண்டும். எந்த வழியாகப் போவது நல்லது?"

"பழுவேட்டரையர் தஞ்சாவூர் இராஜபாட்டையில் போகிறார். நீ முல்லையாற்றங் கரையோடு போனால் பழையாறையை அடையலாம்."

"நீங்கள் கொஞ்சம் சீக்கிரமாகவே குதிரைக் குளம்புக்குக் கவசம் அடித்துக் கொடுத்தால் நல்லது."

"இதோ!" என்றான் கொல்லன்.

வளைத்துக் காய்ச்சியிருந்த இரும்பைச் சுத்தியினால் அடிக்கத் தொடங்கினான்.

"இது பெரிய பழுவேட்டரையருக்கு! இது சின்னப் பழுவேட்டரையருக்கு! இந்த அடி சம்புவரையருக்கு! இது மழவரையருக்கு!" என்று சொல்லிக் கொண்டே அடித்தான். இதிலிருந்து அந்தச் சிற்றரசர்கள் பேரில் நாட்டு மக்கள் எவ்வளவு கோபம் கொண்டிருக்கிறார்கள் என்பதை ஒருவாறு வந்தியத்தேவன் தெரிந்து கொண்டான்.

குதிரைக் குளம்புகளுக்கு லாடம் அடித்து முடிந்தது. செய்து கொடுத்த வேலைக்காகக் கொல்லனுக்குக் காசு தர வந்தியத்தேவன் யத்தனித்தான். கொல்லன் அதைப் பெற்றுக் கொள்ளுவதற்கு மறுத்து விட்டான்.

"நீ நல்ல பிள்ளை என்பதற்காகச் செய்து கொடுத்தேன். காசுக்காகச் செய்து தரவில்லை" என்றான்.

வந்தியத்தேவன் மறுபடியும் கொல்லனுக்கு நன்றி கூறிவிட்டு விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டான்.

புறப்படும் சமயத்தில் கொல்லன் "தம்பி! பழையாறைக்கு நீ எதற்காகப் போகிறாய்?" என்று கேட்டான்.

"ஐயா! நீங்கள் என்னை அதைப் பற்றி ஒன்றும் கேட்காமலிருந்தால் நான் பொய் சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படாது" என்றான் வல்லவரையன்.

கொல்லன் சிரித்துவிட்டு, "அப்பனே! நீ துரிதமாகக் கெட்டிக்காரன் ஆகி வருகிறாய்! தூங்குகிற போதும் இவ்வளவு ஜாக்கிரதையாயிரு!" என்று சொல்லி விடை கொடுத்து அனுப்பினான்.

* * *

**வ**ந்தியத்தேவன் மறுபடியும் பிரயாணம் தொடங்கியபோது சூரியன் அஸ்தமிக்கும் நேரமாகி விட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தி மயங்கி இருள் சூழ்ந்து வந்தது. இதற்குள் முல்லையாற்றங் கரையை வல்லவரையன் பிடித்து விட்டான். அதற்கு மேல் ஆற்றங் கரையோடு போக வேண்டியது தான். வழி விசாரிக்க வேண்டிய அவசியம் கூடக் கிடையாது.

முன்னிருட்டு வேளைதான். ஆனால் வானத்தில் ஆயிரங் கோடி நட்சத்திரங்கள் ஒளிச்சுடர்களாக விளங்கின. முல்லை நதியின் கரைகளில் மரங்கள் அதிகம் இல்லை. சிறிய சிறிய புதர்கள்தான் இருந்தன. ஆகையால் வழி கண்டு பிடித்துப் போவதற்கு வேண்டிய வெளிச்சம் விண் மீன்கள் தந்தன.

வானத்தில் ஜொலித்த நட்சத்திரங்களோடு போட்டியிடுவதுபோல் ஆயிரக் கணக்கான மின்மினிப் பூச்சிகள் நதிக் கரைப் புதர்களைச் சுற்றி வட்டமிட்டு விளையாடிக் கொண்டிருந்தன.

வந்தியத் தேவனுடைய உள்ளத்தில் உற்சாகம் ததும்பியது. அதற்குப் பல காரணங்கள் இருந்தன. நாடெல்லாம் இளவரசரைப் பற்றிய கவலையில் ஆழ்ந்திருக்கும்போது அவனுக்குமட்டும் அவர் பத்திரமாயிருக்கிறார் என்ற செய்தி தெரிந்திருந்தது. இளவரசரிடம் சோழ நாட்டு மக்கள் எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறார்கள் என்பதை அவன் ஓரளவு தெரிந்து கொள்ள முடிந்தது. மந்திரவாதி ரவிதாஸனை அவன் மறுபடியும் ஏமாற்ற முடிந்ததை நினைக்கக் குதூ

கலமாயிருந்தது. இதை யெல்லாம் விடக் குந்தவை தேவியைச் சீக்கிரத்தில் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணம் அவனுக்கு எல்லையில்லாத மனக் கிளர்ச்சியை அளித்தது.

வெறுமனேயா பார்க்கப் போகிறான்? இளைய பிராட்டி கூறிய காரியத்தைச் செய்து முடித்து விட்டுப் பார்க்கப் போகிறான்! அந்தக் காரியத்துக்கு ஏற்பட்ட தடங்கல்களை யெல்லாம் நினைத்து அவற்றை யெல்லாம் தான் எதிர்த்து வெற்றி கொண்டதையும் எண்ணி அவன் பெருமிதம் அடைந்தான். நாளை மாலை இந்த நேரத்துக்குள் இளைய பிராட்டியைச் சந்தித்து விடுவோம் என்பதில் சந்தேகமில்லை. ஆகா! அந்தச் சந்திப்பைக் குறித்து எண்ணும் போதே அவனுக்கு மெய் சிலிர்த்தது.

நட்சத்திரச் சுடர்களால் விளங்கிய வானமும் மின்மினிகள் பறந்த பூமியும் சல சல வென்ற சத்தத்துடன் ஓடிய முல்லையாற்று வெள்ளமும் மந்த மந்தமாக வந்த குளிர் பூங்காற்றும் வந்தியத்தேவனைப் பரவசமடையச் செய்தன. வானமும் பூமியும் ஒரே ஆனந்த மயமாக அவனுக்கு அச்சமயம் தோன்றியது. பழைய காதல் பாட்டு ஒன்று அவனுக்கு நினைவு வந்தது. தான் வாய் விட்டு உற்சாகமாகப் பாடுவதற்குத் தகுந்த இடந்தான் இது. சுற்றுப்புறமெங்கும் மனித சஞ்சாரமே கிடையாது. ஏன்? பட்சிகள் கூடக் கூடுகளிலே சென்று அடங்கி விட்டன. அவன் பாடுவதற்குத் தடை என்ன இருக்கிறது? இதோ அவன் பாடிய பாட்டு. யாரை மனதில் நினைத்துக் கொண்டு பாடினான் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

"வானச் சுடர்க ளெல்லாம்
மானே உந்தனைக் கண்டு
மேனி சிலிர்க்குதடி—அங்கே
மெய்ம்மறந்து நிற்குதடி!

தேனே உந்தன் குரல்தான்
தென்றலோ உன் வாய் மொழிகள்
மீனொத்த விழி மலர்கள்—கண்டால்
வெறி மயக்கம் தருவதேனோ?"

வந்தியத்தேவன் இப்படிப் பாடி முடித்தானோ இல்லையோ, அவனுடன் போட்டி போடுவது போலத் தூரத்தில் நரிகள் ஊளையிடத் தொடங்கின.

அதே சமயத்தில் மனிதக் குரலில் கல கல வென்று சிரிக்கும் சத்தம் கேட்டது.

வந்தியத்தேவன் சிறிது மிரண்டு சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய கை உடைவாளில் சென்றது.

புன்னைமரம் ஒன்றின் கரிய நிழலிலிருந்து ஓர் உருவம் வெளிப்பட்டது.

"தம்பி! உன் பாட்டுப் பிரமாதம்! நரிகளின் போட்டி கானம் அதை விடப் பிரமாதம்!" என்று கூறிவிட்டுத் தேவராளன் மீண்டும் சிரித்தான்.

# "மனிதன் எதனால் உயர்கிறான்?"

(ஸ்ரீ டி. வி. ராமானுஜம், எம். ஏ., பம்பாய்)

சமீபத்தில் "கல்கி"யில் வெளியான "மனிதன் எப்படி உயர்கிறான்!" என்ற தலையங்கத்தை வாசித்து மகிழ்ச்சியும் உற்சாகமும் அடைந்த பல்லாயிரக் கணக்கான தமிழர்களில் நானும் ஒருவன்.

"மகிழ்ச்சி"க்குக் காரணம் என்னவென்றால், எவ்வளவு தெளிவாகவும், கவர்ச்சிகரமாகவும் அந்தக் கட்டுரை அமைந்திருக்கிறது என்பதை நினைத்துப் பார்த்து மீண்டும் மீண்டும் வாசித்து அடையும் பெருமிதம். "மனதிற்குள்" வாசிக்காமல், வாய்விட்டு இரைந்து வாசித்தால் அபூர்வமான பிரசங்கம் நிகழ்த்துவது போன்ற உணர்ச்சி உண்டாகிறது.

"உற்சாகம்" எதனால் என்றால், தைரியமாக யாராவது ஒருவர் முன்வந்து இத்தகைய பிரச்னைகளைப் பற்றித் திறமையாக எழுதி, உயர்ந்த லட்சியங்களைப் பரப்புகிறாரல்லவா என்ற நினைப்பினால். "டப்பா சங்கீதத்தைப் பற்றியும், நமது சினிமாப் படங்களில் பலவற்றின் போக்கைப் பற்றியும் உங்களைப் போலவே அபிப்பிராயமுடையவர்கள் எண்ணற்றவர். ஆயினும், இந்த அபிப்பிராயங்கள் எப்படிச் சரியானவை, எப்படி அவற்றைப் பிரசாரம் செய்வது சிறந்த சமூகத் தொண்டாகும், என்பதை யெல்லாம் குறித்து எழுதுவதற்கு எல்லோருக்கும் அவகாசமும் அதற்கேற்ற வாய்ப்பும் கிடைப்பதில்லை.

சினிமாப் படங்கள் மாத்திரமல்ல; நமது சங்கீத சாஹித்யங்கள், நமது நடனங்கள், நாடகங்கள், சிறு கதைகள், தொடர்கதைகள், நமது ஆசாரங்கள், பழக்க வழக்கங்கள் எல்லாம் "மனிதனை உயர்த்தும்" முறையில் அமைய வேண்டும்.

மனிதனுக்கு உன்னதமான லட்சியங்கள் சில சமயங்களில் தோன்றும்; வேறு சில சமயங்களில் மட்டமான எண்ணங்களும் உதிக்கும். இது சாதாரண மனிதர்களுக்கு இயல்பு. உத்கிருஷ்டமான நோக்கங்களைப் பெருக்கும்படியும், ஸ்திரப்படுத்தும்படியும் நாம் நமது கலைகளையும் ஆசாரங்களையும் அமைக்கப் பாடுபட வேண்டும்.

நமது ஜீவிதத்திலும் நமக்கு நன்றாகத் தெரிந்த மற்றவர்களுடைய ஜீவிதங்களிலும் அற்புதமான சம்பவங்கள், துக்ககரமான நிகழ்ச்சிகள், நாமே நிதானமாக நினைத்துப் பார்க்கும்போது வெறுக்கத்தக்க காரியங்கள் இவை யெல்லாம் ஏற்

பட்டு விடுவது சகஜம். ஆனால், இத்தகைய சம்பவங்களையும், இவற்றின் மூலகாரணமான எண்ணங்களையும் அகற்ற நாம் முயல்வதும் இயல்பு. இந்த நிலையில், கதைகளிலும், காட்சிகளிலும், சிற்பத்திலும், நாடகத்திலும், சினிமாவிலும் கூடவா அந்த மட்டமான நிகழ்ச்சிகளையும், அற்பமான நினைவுகளையும் புகுத்த வேண்டும்! கற்பனை உலகமாவது உயர்தரமாக இருக்கக் கூடாதா! நாடகமும், நடனமும், சினிமாவும் சந்தோஷத்தை உண்டு பண்ணுவதுடன், மனிதனைக் கொஞ்சமாவது தூய்மைப் படுத்தும் பக்ஷத்தில், உயர்த்தக் கூடிய முறையில் அமையக் கூடாதா!

"சினிமா" என்பது பிரும்மாண்டமான பிரசார இயந்திரம். லட்சக்கணக்கான மக்களின் அபிப்பிராயங்களை உருவாக்கக் கூடியது. அதன் மூலமாக மனிதர்களை உயர்த்தலாம் அல்லது அற்பர்களாகவும், வெறியர்களாகவும், ஒன்றுக்கும் உபயோகமற்றவர்களாகவும் தாழ்த்தலாம்.

"சமூகக் கதைகள்" என்று பறைசாற்றி அவற்றை ஆதாரமாகக் கொண்ட நாடகங்களுக்கும் சினிமாக்களுக்கும் நான் எனது குடும்பத்தினர்களை அழைத்துச் சென்று விட்டு அவற்றைப் பார்க்கப் பிடிக்காமல், அவை முடியு முன்பேயே திரும்பி வந்ததுண்டு. "ஆஹா, நமது குழந்தைகளும் சகோதரிகளும் இவ்வளவு கீழ்த்தரமான—மட்டமான காட்சிகளைப் பார்க்க வேண்டுமா!" என்று துக்கப்பட்டதுண்டு.

நமது ஒப்புயர்வற்ற தலைவர் ராஜாஜியின் சிறு கதைகளில் எப்பொழுதும் ஒரு நல்ல தத்துவம் அடிப்படையாக அமைந்திருக்கும். மனிதனை உயர்த்தும் முறையில் ஒரு சீரிய கருத்து அவற்றின் ஆத்மா போல் ஊடுருவி நிற்கும். ஹாஸ்யரஸம், சோக ரஸம், வாழ்க்கையை உள்ளபடி படம் பிடித்துக் காட்டுதல்—இவை யெல்லாமும் இருக்கும்; இவற்றுக்கெல்லாம் மேலே பிரதானமாக, ஏதாவது ஒரு லட்சியம் அந்தக் கதைகளின் தத்துவமாக அமைந்திருக்கும்.

அம்மாதிரியே நமது சினிமாக்களிலும் நாடகங்களிலும், உயர்தர ஜோடனைகள், அழகான நடனங்கள், சாதுர்யமான சம்பாஷணைகள், இனிமையான கீதங்கள்—இவைகளெல்லாம் இருக்க வேண்டியதுதான். ஆனால் இவை மாத்திரம் போதாது. மனிதனுடைய வாழ்க்கையைப் புனிதப் படுத்தும்படியான, அவனுடைய லட்சியங்களை ஸ்திரப் படுத்தி ஊர்ஜிதப்படுத்தும்படியான, அவனுடைய பிரகிருதியிலுள்ள தேவாம்சங்களை விருத்தி செய்து, அசுராம்சங்களை (விலங்கின் இயல்புகளை) அடக்கும்படியான உட்கருத்து இருக்க வேண்டும்.

தயை, பக்தி, பெரியோர்களை மதிப்பது, தியாகம், கொடை, உழைப்பு, அன்பு இவையெல்லாம் நம் மக்களுடைய பண்பின் அறிகுறிகள். சிபியும், ஏகலைவனும், கர்ணனும், காந்தியும் தோன்றிய நாட்டின் கலாசாரத்தின் உயர்வுகளைச் சித்தரிப்பது சிரமமா! நம் நாட்டிலுள்ள பாமர மக்களிடையில் எவ்வளவு சிறந்த குணங்களையும், பழக்க வழக்கங்களையும் பார்க்கிறோம்!

மனிதனை உயர்த்தும் முறையில் நமது நடையுடை பாவனைகளும், கலைகளும் அமையவேண்டும். நாம் புத்தி பூர்வமாக முயற்சி செய்யாமல், அவை அம்மாதிரி அமைந்து விடாது.

# அதிர்ஷ்டத் திட்டம்

ஒரு பூதமா, இரண்டு பூதமா! எத்தனையோ பூதங்கள் வழி மறித்தன. எனினும் அவற்றையெல்லாம் வெற்றிகரமாகத் தாண்டிக் குடியரசு இந்தியா நிர்வாக ரதம் பயங்கரமான முனையைக் கடந்து விட்டது. இப்போது அது சுபிட்சப் பாதையை அடைந்திருக்கிறது என்பதையே இந்திய சர்க்கார் நிதி மந்திரி கனம் ஸி. டி. தேஷ்முக் இந்தியா பார்லிமெண்டில் சமர்ப்பித்துள்ள வரவு செலவுத் திட்டம் காட்டுகிறது.

அத்திட்டத்தின்படி 1951—52-ல் இந்தியா சர்க்காரின் வருமானத்தில் செலவு போக 92 கோடி ரூபாய் மிச்சம் ஏற்பட்டிருப்பதைக் கவனிப்போர் ஆச்சரியப் படாமல் இருக்க முடியாது.

நிதி மந்திரி சமர்ப்பித்துள்ள 1952—53-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்திலும், வருமானம் 424.98 கோடி ரூபாய், செலவு 406,25 கோடி ரூபாய், மிச்சம் 18,73 கோடி என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. புதிய வரிகள் எதுவும் விதிக்காமல் இந்த மிச்சம் ஏற்படுவது மிகவும் பாராட்டத்தக்க விஷயம் அல்லவா!

பாரத நாடு சுதந்திரம் பெற்றதிலிருந்து சர்க்காரின் வருமானத்தைப் பல பூதங்கள் விழுங்கிக் கொண்டிருந்தன. அகதிகள் பிரச்னை பல கோடி ரூபாயை விழுங்கியது. காஷ்மீர் யுத்தம் கோடிக் கணக்கில் கபளீகரம் செய்தது. உணவுப் பற்றாக் குறையினால் ஏற்பட்ட நிலைமை சுமார் நூற்றைம்பது கோடி ரூபாய்க்கு மேல் விழுங்கி ஏப்பமிட்டு விட்டது. சேர்ந்தாற்போல் நாலு வருஷங்களாகப் பருவகால மழை பெய்யாததால் ஏற்பட்ட உணவுப் பஞ்சம் சர்க்கார் சமாளிக்க வேண்டிய பயங்கரமான பிரச்னைகளில் ஒன்றாகிவிட்டது. ஒரு புறம் பண வீக்கமும் மற்றொரு புறம் விலைவாசிகளின் விஷ ரூபமும் சர்க்காருக்கு இடைவிடாத தலைவலியாயின. இவ்வாறு எதிர்பாராத பல கஷ்டங்கள் ஏற்பட்டதால்தான் சுதந்திர இந்தியா சர்க்கார் செய்த நல்ல காரியங்கள் எல்லாம் சோபிக்க வில்லை. சமுத்திரத்தில் பெருங்காயம் கரைத்த கதையாகிவிட்டது.

எனினும் இத்தகைய பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கும் கூட, தொண்ணூற்றிரண்டு கோடி ரூபாய்க்கு மேல் மிச்சம் ஏற்பட்டிருப்பதை இந்தியாவின் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். பாரத நாட்டின் பொருளாதார நிலை மிகவும் திருப்திகரமாக இருக்கிறது என்பதற்கு இதைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்!

வருமானத்தை யெல்லாம் சர்க்கார் மேற்படி பிரச்னைகளைச் சமாளிப்பதற்காக மாத்திரம் செலவிட்டுவிடவில்லை. தலைமுறை தலைமுறையாக பாரதநாட்டு மக்களுக்குச் சுபிட்சத்தைக் கொடுக்கக் கூடிய பல்வேறு ஆக்கத் திட்டங்களையும் கைக் கொண்டிருக்கிறார்கள்.

உதாரணத்துக்கு, சென்ற ஞாயிற்றுக் கிழமை ஜவாஹர்லால்ஜி சிந்திரியில் திறந்து வைத்த ரசாயன உர உற்பத்தித் தொழிற் சாலையைக் குறிப்பிடலாம். இருபத்து மூன்று கோடி ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள இது ஆசியாவிலேயே மிகப் பெரியது. இந்தத் தொழிற் சாலையின் பயனாக இந்தியாவில் பற்றாக்குறை தீர்ந்து, உணவு உற்பத்தி அபரிமிதமாக அபிவிருத்தி அடையும் என்பது நிச்சயம்.

# ஜெமினியின் அடுத்த சித்திரம்



# மூன்று பிள்ளைகள்

ஒரு தாய் வயிற்றில் பிறந்தும் மூவரும் வெவ்வேறு குணம் வெவ்வேறு விதம்

ஆயினும்

தாயின் பாசம் என்னும் உன்னதச் சரடால் ஒன்றுபட்ட குடும்பத்தின் சித்திரம்

## விரைவில் வருகிறது


LUX
LUX
TOILET SOAP

# பஜகோவிந்தம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 28

எல்லா மோகங்களையும் விட மக்களை மிகவும் மோசம் செய்யும் தன்மையது கலவியின்ப சபலம். தேகத்தில் அமைக்கப்பட்டிருக்கும் இந்தக் கிராமிய வேகம் நெருப்பின் வேகத்துக்குச் சமமாக வேலை செய்கிறது. நெருப்பைப் போலவே இது பயன் தரக்கூடிய வேகமும் ஆகும்,—அழித்துச் சர்வ நாசம் செய்யும் வேகமும் ஆகும்.

அனைத்துக்கும் ஆதியும் காரணமுமான முதற் பொருள் — இரண்டற ஒன்றேயாக நிற்கும் ஒரு மெய்ப் பொருள் — நிலையிலாப் பல பொருள்களாகப் பிரிந்து உலகம் என்னும் விசித்திரமாக நிற்கிறது. பலவாகப் பிரிந்து நிற்கும்

விருப்பமாகிய இடைநிலை வேகமே ஆனந்தம் தரும் உயிர் நிலை.

ஆணுக்கும் பெண்ணுக்குமுள்ள ஆகர்ஷண வேகமும் இந்த விசுவ குணத்தின் ஒரு தோற்றம். அது மகா சக்தி வாய்ந்த இயற்கை வேகம். கரியும் வாயுவும் சேர்ந்து எரிந்தால் இரும்பும் கரையும். அவ்வித வேகம் இணைவேகம்.

இந்த இயற்கை வேகத்தை அடக்கி ஆண்டால் அதுவே இல்லறம். ஆனந்தம், தருமம், அர்த்தம் அனைத்தும் அதனின்று விளையும். மனையில் நெருப்பைக் கொண்டு சமைத்து உண்டு வாழ்கிறோம். அதே நெருப்பு வரம்பு தா

ஸுகத: க்ரியதே ராமா போக:
பஸ்சாத் ஹந்த சரீரே ரோக:
யத்யபி லோகே மரணம் சரணம்
ததபி ந முஞ்சதி பாபாசரணம்*

வாழ்க்கையில் மகிழ்ச்சி தரும் விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. அவற்றில் மனத்தைச் செலுத்திப் பயில வேண்டும். புண்ணியமும் பயனும் மகிழ்ச்சியும் கலந்த துறைகளில் தினசரி வாழ்க்கையில் உள்ளத்தைச் செலுத்திச் சந்தோஷம் அடைந்து வந்தால் கிராமிய கலவி போகத்தில் புத்தி அதிகமாகச் செல்லாது. எல்லாம் பழக்கத்தைப் பொருத்து நிற்கிறது. பெண்களோடு கலந்து பேசி உறவாடி வந்தாலும் இணைப்புலனை அடக்கி, உடலை மறந்து விட்டு அவர்களின் கூட்டுறவை நல்ல முறையில் அனுபவிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். நம்முடைய அன்புக்குப் பாத்திரமான தாய், சகோதரி, மகள் முதலியவர்களோடு பேசி விளையாடி நாம் மகிழ்ச்சியடைய வில்லையா? நண்பர்களுடன் கலந்து மிக மகிழ்வதில்லையா? அவ்வாறே பெண்களுடன் கலந்து, இணையை மறந்து, உயர்தரப் பான்மையில் மகிழ்ச்சி அடையப் பயில வேண்டும். இதுவே நல்ல பண்பாடு.

இந்த விஷயத்தில் மேல் நாட்டாரின் நடவடிக்கைகளி லிருந்து நாம் ரொம்பக் கற்றுக் கொள்ளலாம். மொத்தத்தில் நம்மைவிட அவர்கள் இந்த யோகத்தில் சித்தி யடைந்திருக்கிறார்கள். ஆணும் பெண்ணும் தத்தம் இணையை மறப்பது ஒரு யோக முறையே ஆகும். ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் நெருங்கிய உடனே நம்மவர்களுடைய எண்ணம் தேக தருமத்தில் சென்று விடுகிறது. அத்தகைய அடங்கா வேகம் மேல் நாட்டாரில் அநேகமாக இல்லை, ரொம்பக் குறைவு. இதற்குக் காரணம் சீதோஷ்ண நிலை என்பார்கள். இந்தச் சமாதானத்தை நான் ஒப்புக் கொள்ள வில்லை. நம்முடைய பயிற்சியும் பண்பாடும் வித்தியாசப் படுகிறது. இதுதான் முக்கியமான காரணம். பலவிதங்களில் இன்பம் பெறுவதற்கு வழியிருக்கக் கேவலம் தேகக் கலவி ஒன்றையே வைத்துக் கொண்டு நாம் பைத்தியம் பிடித்துக் கெட்டுப் போகிறோம்.

படிப்பு, பாட்டு, சித்திரம், ஆட்டம், கேளிக்கை, கூத்து, பேச்சு, ஹாஸ்யம், ஆறு, மலை, தோப்பு, வானம் முதலிய இயற்கை யழகுகளும், இன்னும் எவ்வளவோ அனுபவிக்கக் கூடியவைகளும் உலகத்தில் இருக்க அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளாமல் பயனற்ற ஒரு பைத்தியக்கார விஷயத்தையே பேரின்பமாக வைத்துக்கொண்டு அலைந்து உடலையும் உள்ளத்தையும் கெடுத்துக் கொள்ளுகிறோம். மகிழ்ச்சி யுலகத்தைச் சுருக்கிக் கொண்டு சுகமடையாமல் வாழ்கிறோம். எல்லாம் உள்ளத்தைச் செலுத்தும் சாமர்த்தியத்தில் இருக்கிறது. வேறு துறைகளில் மனத்தைச் செலுத்தினால் பழியினின்றும் பாவத்தினின்றும் தப்புவோம். மனத்தைக் கெட்ட விஷயத்தில் தங்க இடம் கொடுத்தால் அது நம்மைக் கவ்வி இழுத்துக் கொண்டு போய்விடும். அனைவருக்கும் தெரிந்ததையே சங்கரரும் பாடினார். நானும் வருத்தத்துடன் சொல்லுகிறேன்.

---

* सुखतः क्रियते रामाभोगः
पश्चाद्धन्त शरीरे रोगः ।
यद्यपि लोके मरणम् शरणम्
तदपि न मुञ्चति पापाचरणम् ॥




[மைசூர்ப் பாகில் எவ்வளவு மைசூர் உண்டோ அவ்வளவுதான் இந்தக் கதையில் காதலும் இருக்கிறது!]

"ஸார்! இந்தக் கதையைப் படியுங்கள்—நன்றாயிருக்கிறது!" என்றார் என் பக்கத்திலிருந்த நண்பர் ஒரு பத்திரிகையைத் திறந்த படி என்னிடம் நீட்டி.

எங்கள் எதிரிலிருந்த பெரியவர் "என்ன காதல் கதையோ?" என்று கேலிப் புன்னகையுடன் கேட்டார்.

"ஏன் பாட்டையா, காதல் கதை என்றால் உங்களுக்குப் பிடியாதோ?" என்று அந்தப் பெரியவரைக் கேட்டேன்.

"பாட்டையாவுக்குக் காடு வாவா என்குது; வீடு போ போ என்குது. அவருக்கு எங்கே காதல் கதை பிடிக்கப் போகிறது?" என்றார் இன்னொரு நண்பர்.

பாட்டையா "கதை என்பது வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக இருக்க வேண்டும். நம் வாழ்க்கையிலோ காதல் என்பதே கிடையாதே. பின்னர் காதல் கதை எங்கிருந்து வரும் என்று கேட்கிறேன்?" என்றார்.

இப்படி ஆரம்பித்த விவகாரம் காரசாரமாகப் போய்க் கொண்டிருந்தது. நாங்கள் ஏறியிருந்த ரயிலும் போய்க் கொண்டிருந்தது.

ஆம், சமீபத்தில் குற்றாலத்தில் நிகழ்ந்த ஒரு கல்யாணத்துக்குப் போய் விட்டுத் திரும்பும்போது, ரயிலில் ஏற்பட்ட ஒரு வாக்கு வாதத்தின் ஒரு பகுதிதான் மேலே கொடுத்திருக்கிறேன்.

வாக்குவாதம் முடியவில்லை, ரயில் நின்றது. என்ன ஸ்டேஷன் என்று ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன்—சங்கரன்கோவில்.

அந்த ஸ்டேஷனில் மூன்று நிமிஷம் நின்று விட்டு ரயில் ஒரு பெரிய பெரு மூச்சு விட்டுக் கொண்டு மேலே நகர்ந்தது. ரயில் ஸ்டேஷனை விட்டு வெளியேறும் தறுவாயில் ஒருவர் எங்கள் பெட்டியில் ஏறினார். வயது முப்பது, முப்பத்தைந்து மதிக்கத் தக்கவர். நல்ல உயரம், பரந்த மார்பு, ஹிட்லர் மீசை, மல் ஜிப்பா—மொத்தத்தில் ஆள் பார்க்க மிக அழகாகவும் கம்பீரமாகவும் இருந்தார். ஏறினவர் கதவைத் தாளிட்டுக் கொண்டு எங்கள் பக்கமாக வந்தார், உட்காருவதற்கு இடமிருக்குமா என்று தேடிக் கொண்டு. அவருக்கு இடம் கொடுப்போமா வேண்டாமா என்று நாங்கள் யோசித்துக் கொண்டிருக்கையில், "வா, அப்பா, சோமசுந்தரம்! சௌக்கியமா? உன்னைப் பார்த்து எத்தனை நாள் ஆயிற்று!" என்றார் பாட்டையா.



பெரியவருக்கு அறிமுகமானவர் என்று தெரிந்ததும், வந்தவருக்கு இடம் கொடுக்க வேண்டியது எங்கள் கடமை என்று தீர்மானித்து, ஒருவர்மேல் ஒருவர் நெருக்கியடித்து உட்கார்ந்து அவருக்கு இடம் பண்ணிக் கொடுத்தோம். அந்த இடத்தில் சௌகரியமாக உட்கார்ந்து கொண்டே, "ஆமாம், ரொம்ப நாளாச்சு. ஏதோ இருக்கிறேன், சித்தப்பா" என்றார் வந்தவர்.

"உனக்குக் குழந்தைகள் உண்டா?" என்று கேட்டார் பெரியவர்.

"அதற்கென்ன குறைச்சல், ஒரு ஆண் ஒரு பெண் இருக்கிறது" என்றார் சோமசுந்தரம்.

"என்ன வயசு இருக்கும்?"

"பிள்ளைக்கு ஏழு வயசு ஆகிறது, பெண்ணுக்கு நாலு வயசு."

"எங்கே இருக்கிறாய்?"

"மதுரையில்தான்!"

"எங்கே வேலை செய்கிறாய்?" என்று கேட்டார் பெரியவர்.

ஏதோ ஒரு கம்பெனியின் பெயரைச் சொன்னார் வந்தவர்.

"என்ன சம்பளம்?"

"எண்பத்தெட்டு ரூபாய்?"

"செலவுக்குக் கட்டுகிறதோ?"

"ஒரு மாசமாவது சம்பளத்தை முழுக்கக் கையில் வாங்கிப் பார்த்தால் அல்லவா தெரியும் சம்பளம் செலவுக்குக் கட்டுகிறதா, இல்லையா என்பது?"

"சம்பளம் முழுதும் வாங்குவதில்லையா, முழுச் சம்பளமும் உங்கள் கம்பெனியில் தரமாட்டார்களோ?" என்று கேட்டார் பெரியவர் ஒரு ஐயத்துடன்.

"முழுச் சம்பளம் அவர்கள் தருவார்கள். ஆனால் நான்தான் வாங்க மாட்டேன். சம்பளம் வருவதற்கு முன்னால் ஆபீசிலேயே கடன் வாங்கி வைத்திருப்பேன். அந்தக் கடன்களுக்குப் பிடித்துக் கொண்டு விடுவார்கள். கடைசியில், ரெவினியூ ஸ்டாம்புக்காக யாரிடமாகிலும் ஓரணா கடன் வாங்கிக் கையெழுத்துப் போட்டு விட்டு, வெறுங் கையுடன் வெளியே வருவேன் சம்பள நாள் அன்று" என்றார் சோமசுந்தரம்.

இதை அந்த மனுஷன் மிக அலட்சியமாகக் கூறினார் என்றாலும் அங்கே கேட்டுக்



"நாளைக்குக் காலையில் 7-30 மணிக்கு நான் ரேடியோவிலே பாடப் போகிறேன், ஸார்! அவசியம் நீங்கள் கேட்க வேண்டும்!"

"ஆகா! பேஷாய்க் கேட்கிறேன்! அதற்கு ஒரு நாலணு கொடுங்கள்!"

"நாலணுவா? என்னத்துக்கு ஸார்?"

"என்னிடம் ரேடியோ ஏது ஸார்? ஹோட்டலில் போய்த்தான் கேட்க வேண்டும்! அங்கே போய்ச் சும்மா உட்கார்ந்து கொண்டிருந்தால் அவ்வளவாக நன்றாயிருக்காது. ஏதாவது டிபனாவது சாப்பிட்டால்தானே நன்றாய்த் தைரியமாக உட்கார்ந்து கொண்டு கேட்கலாம்!"

கொண்டு உட்கார்ந்திருந்த எங்களுக்கெல்லாம் மனசுக்கு மிகவும் கஷ்டத்தை யளித்தது. ஆனால் அவருடைய குரலில் விளக்க முடியாத திட வைராக்கியமும், பெருமிதமும் தொனித்தது. இதன் பொருள் அப்போது எனக்கு விளங்கவில்லை.

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போதே வண்டி ராஜபாளையம் ஸ்டேஷனை அடைந்தது. என்னுடன் தென்காசியில் ஏறிய நண்பர்கள் அத்தனை பேரும், (பாட்டையா உள்பட) இறங்கினார்கள். நான் ஜன்னலண்டை போய் நின்றேன். சிலர் எனக்கு நமஸ்காரம் சொல்லி விடை கொடுத்தனுப்பினார்கள்; சிலர் வணக்கம் கூறி என்னை வழியனுப்பினார்கள். வண்டி புறப்பட்டது. மறுபடியும் ஓடும் ரயிலில் அந்த மனிதர் வந்து ஏறினார். ஆம், ராஜபாளையம் ஸ்டேஷனில் இறங்கி, பாட்டையாவுடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுத்தான் வந்து ரயிலில் ஏறினார் சோமசுந்தரம்.

"வாங்க ஸார்" என்றேன்.

அவர் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். "நீங்கள் எவ்வளவு தூரம் போகிறீர்கள்?" என்று கேட்டார்.

"நீங்கள் போகும் ஊருக்குத்தான் நானும் போகிறேன்" என்றேன்.

"தேவலை - நமக்கு நல்லதுணை வாய்த்திர்கள்" என்றார் சோமசுந்தரம்.

இப்படி எங்களுக்குள் பேச்சு ஆரம்பமாகியது. அந்தப் பேச்சில் பாட்டையாவாக வந்தவர் ஒரு பெரிய பணக்காரர், வியாபாரி, இந்த மனுஷருக்குச் சித்தப்பா ஆகவேண்டும் ஆகிய விவரங்கள் தெரிய வந்தன.

இப்படிப் பேசிக் கொண்டிருந்த போதே என் மனசில் வெகு நாழிகையாக உறுத்திக் கொண்டிருந்த விஷயத்தையும் கேட்டு விட்டேன்: "அது சரி, ஸார்! உங்கள் சம்பளத்தைப் பற்றிக் கேட்டபோது உங்கள் உண்மை நிலையை அப்படியே பட்டவர்த்தனமாக அத்தனை பேர் எதிரில் கூறினீர்களே! அதைக் கேட்டுக்கொண்டிருக்கும் அத்தனை பேரையும் வருத்தமுறச் செய்கிறோமே என்று உங்களுக்குச் சற்றும் படவில்லையே?"

"எனக்கே வருத்தமாக இல்லாத போது பிறருக்கு ஏதுக்கு ஸார் என் நிலைமையைப் பற்றி வருத்தம்?"

"நிஜமாகவே உங்களுக்கு வருத்தம் இல்லையா?" என்று கேட்டேன்.

"இல்லை ஸார், இல்லை. இவ்வளவு வருத்தமும் பெருமையாக அல்லவோ சொல்லிக் கொண்டேன். சித்தப்பாவிடம் — அந்த அயோக்கியனிடம் — இவ்வளவும் கூறிப் பெருமைப் பட்டேன், ஸார். எனக்குக் கொஞ்சங்கூட வருத்தமில்லை. நான் இந் நிலையிலிருக்கிறேன் என்ற செய்தியைத் தெரிவித்தேன், அவ்வளவுதான், ஸார்!" என்றார்.

அவர் கூறிய மொழிகள், அவர் கூறிய பெருமை, அவர், எல்லாமே ஒரு புதிராகத் தோன்றியது. "எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை!" என்றேன்.

"என் கதையைச் சுருக்கமாகச் சொன்னால் உங்களுக்கு எல்லாம் விளங்கிவிடும்" என்று சொல்லி, தம் கதையைச் சொன்னார்.

★

நண்பர் சோமசுந்தரம் இன்று இந்த நிலையில் இருந்தாலும் அவர் நல்ல ஒரு பணக்கார குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் மட்டும்தான் இன்று இந்த நிலையிலிருக்கிறாரே தவிர, இவர் குடும்பத்தினர் அனைவரும் சுகபோகங்களுடன் தான் வாழ்கின்றனர்.

பதினைந்து வருஷங்களுக்கு முன் சோமசுந்தரமும், அவருடைய தகப்பனாரும் இலங்கையில் வியாபாரம் செய்து நல்ல பொருள் ஈட்டினர். யுத்தம் ஆரம்பமாவதற்கு இரண்டு வருஷங்களுக்கு முன், இன்னும் நிலைமை எப்படி எப்படி மாறுமோ என்று கடையை விற்றுவிட்டுத் தாய்நாட்டுக்குத் திரும்பினார்கள். அப்போது ஸ்ரீமான் சோமசுந்தரத்துக்குப் பதினாறு வயது. தாய் நாட்டுக்குத் திரும்பி இரண்டு ஆண்டுகள் கழிந்ததும், சோமசுந்தரத்தின் கல்யாணப் பேச்சு அடிபடலாயிற்று.

சோமசுந்தரத்தின் குடும்பம் இருந்த தெருவிலேயே, அவர்கள் சொந்தத்தில் ஒரு பெண்

இருந்தாள். அந்தப் பெண்ணைச் சோமசுந்தரத்துக்குக் கொடுப்பது என்று சிறு வயது முதலே பிரஸ்தாபம் இருந்தது. ஆனால் அந்தக் குடும்பம் திடீர் என்று நொடித்துப் போய் ஏழ்மையில் சிக்கிக் கொள்ளவே, இனி அந்தச் சம்பந்தம் வேண்டாம் என்று சோமசுந்தரத்தின் பெற்றோரும் மற்றவர்களும் கருதினர். ஆனால் சோமசுந்தரம் ஒரே பிடிவாதமாக 'கட்டினால் அந்தப் பெண்ணைத் தான் கட்டுவேன் இல்லாவிடில் கல்யாணமே வேண்டாம்' என்று கூறிவிட்டார். வருஷம் ஒன்றாயிற்று. சோமசுந்தரத்தின் மனம் மாறும் வழியாக இல்லை; அந்தப் பெண்ணுக்கும் கல்யாணமாகும் வழியைக் காணோம்.

இந்த நிலைமையில் அவருடைய சித்தப்பா, அங்கே வந்து குதித்தார். நிலைமையை அறிந்து தமது பிரமாத புத்திக் கூர்மையினால் சோமசுந்தரத்தை நடுங்க வைக்கும் ஒரு தந்திரம் கண்டு பிடித்து விட்டதாக நினைத்துக் கொண்டு, "நீ இந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொள்வதானால் விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுத்தாக வேண்டும்" என்றார்.

விடுதலைப் பத்திரம் என்றால், "என் பூர்விக சொத்துக்கோ, என் தந்தையின் சுயார்ஜித சொத்துக்கோ பங்குக்கு நான் வரவில்லை. பிற்காலத்திலும் வரமாட்டேன். நான் இந்தக் குடும்பத்திலிருந்தே விடுபட்டவனாகிறேன்" என்று எழுதிக் கொடுப்பது. இப்படி எழுதிக் கொடுப்பது என்பது எளிதான காரியமில்லை. ஐம்பதனாயிர ரூபாய்ச் சொத்துக்கு உடையவன் எவன் இப்படித் துணிந்து ஒரு காலணா கூட வேண்டாம் என்று எழுதிக் கொடுப்பான்? எனினும் சோமசுந்தரம், துணிந்து எழுதிக் கொடுத்தார். பிறகு சில நாட்களில் அவருக்குக் கல்யாணம் நடந்தது. கல்யாணம் ஒரு பெரிய பணக்காரர் வீட்டுக் கல்யாணம் போல் நடக்கவில்லை. ஊர் கூட்டப்படவில்லை; கொட்டு மேளம் அடிக்கவில்லை. வீட்டோடு, கல்யாணம் என்ற பெயருக்கு ஒரு சடங்கு நடந்தது, அவ்வளவு தான். கல்யாணமான மறுநாளே ஊரை விட்டுப் புறப்பட்டார். அதற்குப் பிறகு குடும்பத்துக்கும் அவருக்கும் சம்பந்தமிருக்கவில்லை. அவர் தந்தையைப் பார்க்கவில்லை. தாயைப் பார்க்கவில்லை. சகோதரைப் பார்க்கவில்லை. அவர் குடும்பத்தினரும் அவரை நல்லதற்கும் அழைக்கவில்லை; கெடுதலுக்கும் அழைக்கவில்லை. இதையெல்லாம் நினைத்துச் சற்றும் அவர் வருத்தப்படவில்லை.

கல்யாணமாகிய இந்தப் பத்து வருஷ வாழ்க்கையில் தன்னந் தனியாளாக எவ்வளவோ கஷ்டங்களுக் காளாகித் தம் மனைவி மக்களைப் பாதுகாத்திருக்கிறார். ஆயினும் அவ்வளவு கஷ்டங்களும் அவருக்குக் கஷ்டமாகவே தோன்றவில்லை. தாமே வலிய ஏற்றுக் கொண்ட கஷ்டம் எப்படி ஒரு கஷ்டமாகும்! அதெல்லாம் ஒரு இன்பமல்லவா?



பையன்:—அம்மா, இன்னொரு மைசூர்ப்பாகு கொடு, அம்மா!

அம்மா:—ஏண்டா போக்கிரி, நான் இப்பொழுதுதானே ஒன்று கொடுத்தேன்? போதாதா?

பையன்:—தின்னுவதற்கு இல்லை அம்மா! அந்த மைசூர்ப்பாகை உடைப்பதற்கு!

இத்தனை நாட்களுக்குப் பிறகு இன்றுதான் அவர் தம் சித்தப்பாவைப் பார்க்கிறார். தம் தந்தைக்கு விருப்பமில்லாத காரியத்தைச் செய்ய வைத்தவர் இந்தச் சித்தப்பா. இவரிடம் தம் பெருமையை, நாம் நினைக்கிற கஷ்டத்தை, இன்று சொல்லிக் கொள்ள வேண்டாமா என்று என்னைக் கேட்டார். "இவரிடம், நான் இவ்வளவு கஷ்டப்படுகிறேன் எனினும் என் மனசு கஷ்டப்படவில்லை; நான் அன்று செய்த காரியம் தவறு என்று நினைக்கவில்லை. விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுத்தது தவறு என்று நினைக்கவில்லை—இதெல்லாம் நான் உண்மையிலேயே பெருமைப்பட வேண்டிய விஷயங்கள் அல்லவா?" என்று வேறு என்னைக் கேட்டார்.

அவர் உணர்ச்சியைப் பார்த்து நான் வாயடைத்து பிரமை பிடித்து நின்றேன்!

ஆயினும் என்னை அறியாமல் "வாஸ்தவம்" என்று சொல்லி வைத்தேன்.

கொஞ்ச நேரத்துப் பிறகு என் முழு உணர்ச்சியும் என் வசமான பிறகு "ஒரு சிறு சந்தேகம். கேட்டால், தவறாக நினைத்துக் கொள்ள மாட்டீர்களே?" என்றேன்.

"கேளுங்கள், பரவாயில்லை" என்றார்.

"உங்கள் விவகாரங்களில் எங்கேயேனும் காதல் இடம் பெற்றிருக்கிறதோ?" என்று கேட்டேன்.

"இவ்வளவுக்கும் அடிப்படைக் காரணமே அது தானே?" என்றார் சோமசுந்தரம்.

அப்படியானால் பாட்டையாவுக்கு ஏன் இந்த விஷயம் புரியவில்லை? அவர் நம் வாழ்க்கையில் 'காதல் இல்லை' என்று எப்படிச் சொன்னார் என்பதை யோசித்துப் பார்க்கிறேன், எனக்கு இன்னும் புரியவில்லை.

# கூர்மையானது!



# மலிவானது!

ஸெவன் ஓ' க்ளாக் ப்ளேடுகள் உயர் தர எஃகினால் செய்யப்பட்டவை. மிகக்கூர்மையாக இருக்க அவற்றின் முனைகள் மூன்று தடவைகள் தீட்டப்படுகின்றன. அவை மிகக்கூர்மையாக இருப்பதால் ஒவ்வொரு ப்ளேடைக் கொண்டு சுத்தமாக பலதடவைகள் க்ஷவரம் செய்து கொள்ள முடிகிறது. அவற்றை அதிக காலம் உபயோகிக்க முடிவதால் அவை சிக்கனமானவை.

## 7 o'clock

### ஸெவன் ஓ'க்ளாக் ஸ்லாட்டட் பிளேடுகள்



10 ப்ளேடுகள் கொண்ட பாக்கெட் ரூ. 1

TAM.

# அமரபுரி இளவரசி

விஜயம்

## 11. அதிசயமும் ஆனந்தமும்

"இளவரசி!" என்று அந்த ராஜகுமாரன் அழைத்ததும் கமலம் திகைப்பு நீங்கித் திடுக்கிட்டு அவன் பக்கம் திரும்பினாள். அவன் முகத்தைப் பார்த்ததும் அவளுக்கு எங்கிருந்தோ நாணம் வந்துவிட்டது. ராஜகுமாரன் அவள் கைகளைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய்க் குளத்தங்கரைப் படியில் உட்காரவைத்துத் தானும் உட்கார்ந்து கொண்டான்.

தலையைக் குனிந்தபடியே கமலம், "தாங்கள் யார்? நான் எங்கேயிருக்கிறேன்? சற்று முன் என்னோடு பேசிய கிளி எங்கே? நான் கனவு காணவில்லையே?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள்.

ராஜகுமாரன் சிரித்துக் கொண்டே, "கமலம், நீ கனவு காணவில்லை. சற்று முன் உன் அழகிய கரங்களில் அமர்ந்திருந்த கிளி நான்தான். இந்த அழகிய தீவுதான் என் ராஜ்யம். ஒரு மந்திரவாதி என் தங்கையை மணந்து கொள்ள ஆசைகொண்டு என் தகப்பனாரிடம் வந்து பேசினான். அவர் அவனைக் கண்டபடி ஏசிப் பேசித் துரத்திவிட்டார். ஆனால் மந்திரவாதி எங்கள் குடும்பத்தின்மீது வஞ்சந் தீர்த்துக் கொள்ளத் தீர்மானித்து என் தகப்பனாரை வஞ்சனையாகக் கொன்று எங்களது அழகிய தேசத்தை மனித வர்க்கமே இல்லாத கொடிய வனப் பிரதேசமாக மாற்றி, என்னையும் கிளியாக்கிவிட்டான்! கமலம், நான் கிளி உருவம் அடைந்ததும் பயந்து போனேன்; தொண்டை வற்றும்படி "கீ கீ!" என்று கத்திக் காடு மேடெல்லாம் பறந்து திரிந்தேன். வான மண்டலம் முழுவதும் வளைய வந்தேன். கண்ணீர் விட்டுக் கதறினேன். கடைசியில் ஒரு நாள் என் அதிர்ஷ்டவசமாக அந்தப் பொல்லாத மந்திரவாதியைப் பார்த்தேன். அவனிடம் இதற்கு ஒரு விமோசனம் கூறும்படி கேட்டேன். அவனும் இரக்கங் கொண்டு 'அமரபுரி இளவரசியினால் உன் பழைய உருவம் கிடைக்கும். அவளே இங்கு வருவாள். ஆனால் அது எப்போது என்று கூற முடியாது. உன்னுடைய தகப்பன் உன்னுடைய தங்கையைக் கொடுக்க மறுத்தான். அதற்குப் பலனாக அவள் படாத பாடெல்லாம் படுவாள். அதற்காகத்தான் உன் தங்கையின் உருவத்தை மாற்றாமல் விட்டு வைத்திருக்கிறேன்!' என்று கூறிவிட்டுப் போய்விட்டான். போகும்போது மனிதர்கள் மாதிரியே பேசும் சக்தியை மட்டும் எனக்குக் கொடுத்தான்......!" என்று ராஜகுமாரன் கொஞ்சம் நிறுத்தினான்.

கமலம் பரபரப்புடன், "உங்கள் தங்கை எங்கே?" என்று கேட்டாள்.

ராஜகுமாரனின் குரல் தழுதழுத்தது. "கமலம், என் தங்கையைப் பற்றிச் சொல்லுவதற்கு முன்னால் நீ அவளை மன்னித்ததாகச் சொல்ல வேண்டும்!"

"நானா? உங்கள் தங்கையை மன்னிக்க வேண்டுமா? நான் அவளைப் பார்த்தது கூட இல்லையே! அவள் எனக்கு என்ன தவறு செய்தாள்? எனக்கு ஒரு தவறும் செய்யாதவளை நான் என்னத்துக்காக மன்னிப்பது? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!"

"கமலம், என் தங்கையை உனக்கு நன்றாய்த் தெரியும். அவள் யாரென்று சொன்னால் நீ அவளை மன்னிக்கமாட்டாய். உனக்கு அவள் செய்திருக்கும் தீங்கை மறந்து மன்னிப்பது என்பது கொஞ்சங்கூட முடியாத காரியம். ஆம். அவள்தான் அமரபுரி இளைய ராணி—உன் சித்தி!"

"ஹா! என் சித்தியா? இளையராணிதான் தங்கள் தங்கையா?"

"ஆமாம். அவளேதான். தன் அருமைத் தாய் நாட்டை மீட்பதற்காகவும் தன் அண்ணாவின் மீது ஏவப்பட்டிருந்த கொடிய மந்திர சக்தியை நீக்குவதற்காகவும் உன்னிடம் மிகவும் கொடுமையாக நடந்து கொண்டாள்!" என்றான் ராஜகுமாரன்.

கமலம், "தங்கள் தங்கை இந்த வனப் பிரதேசத்திலிருந்து தப்பி எப்படி என் தகப்பனாருக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டாள்?" என்று கேட்டாள்.

"ஆமாம், கமலம்! அவள் ஒருத்திதான் இந்தப் பெரிய தீவில் மனித உருவில் இருந்தாள். இந்தத் தோப்பில் தன்னந் தனியாக இருந்தாள். வெகு நாட்களுக்குப் பிறகு இந்தத் தோட்டக்காரக் குடும்பம் வந்து இங்கே குடியேறியது. என் தங்கைக்கு நான் தான் துணை. ஆனால் கிளி ரூபத்தில் இருந்த நான் அவளுக்கு என்ன உதவியைச் செய்ய முடியும்? சதாகாலமும் அவளோடு பேசிக் கொண்டிருப்பேன். ஒரு நாள் ஒரு கப்பல் இந்தத் தீவை நோக்கி வந்தது. அத்துடன் எங்களுக்கு விடிவு காலமும் வந்தது. கப்பல் மாலுமியைக் கெஞ்சி என் தங்கை வேறு ஒரு நாட்டுக்குப் போய் அங்கிருந்த ஒரு சிற்றரசனின் மகளாக வளர்ந்து உன் தகப்பனருக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டாள். கல்யாணத்துக்குப் போகும்போது இங்கு வந்து என்னைச் சந்தித்து விவரமெல்லாம் சொன்னாள்!"



இந்தச் சமயம் பட பட வென்று பறவைகள் இறகுகளை அடித்துக் கொள்ளும் சத்தம் கேட்டது. அடுத்த விநாடி பதினொரு அன்னங்கள் வானத்திலிருந்து கீழே இறங்கி இளவரசர்களாக மாறிவிட்டன. கமலத்துக்கு அதிசயம் தாங்கவில்லை. சூரிய அஸ்தமனத்துக்குப் பிறகுதானே அவர்கள் உரு மாறுவது வழக்கம்? இன்று சூரியன் உச்சிக்கு வருவதற்குள்ளேயே அவர்கள் தங்கள் பழைய உருவங்களைப் பெற்று விட்டனர்! இந்த அதிசயம் முடிவதற்குள் இன்னும் பெரிய அதிசயங்கள் தோன்ற ஆரம்பித்தன.

கோட்டை கொத்தளங்களும், மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும், நதிகளும், குளங்களும் குபீர் குபீர் என்று தோன்றின. அந்த மாந்தோப்பின் நடுவே ஒரு அழகிய அரண்மனை உண்டாயிற்று.

திடீரென்று பழைய உருவம் பெற்ற பதினொரு இளவரசர்களும் தாங்க முடியாத அதிசயத்தினாலும் ஆனந்தத்தினாலும் தவித்தார்கள். பிறகு எல்லோரும் அரண்மனைக்குப் போனார்கள். அங்கே புதிய ஆடைகள் அணிந்து ஜோரான விருந்து சாப்பிட்டார்கள். கமலம் தன் அண்ணன்மார்களிடம் முழு விவரங்களையும் மூச்சு விடாமல் சொன்னாள்.

மறுநாள் அந்த தேசத்து ராஜ குடும்பத்தைச் சேர்ந்த கம்பீரமான கப்பல் அமரபுரிக்குப் புறப்பட்டது. அதில் கமலம், பதினொரு இளவரசர்கள், ராஜகுமாரர்கள் மற்றும் சேனைத் தலைவர்கள், வேலையாட்கள் எல்லோரும் இருந்தனர். பல நாட்கள் பிரயாணம் செய்து கப்பல் அமரபுரியை அடைந்தது.

அரண்மனைக்குப் போனதும் கமலத்தின் தகப்பனார்—அரசன்—ஓடிவந்து அவளைத் தழுவிக் கொண்டான். வெகு நாட்களுக்குப் பிறகு தன் புதல்வர்களைப் பார்த்ததில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கினான்.

கமலம் தன்னை அன்போடு எதிர் கொண்டு அழைத்த இளையராணியை "சித்தி!" என்று அழைத்துத் தழுவிக் கொண்டாள்.

"கண்ணே கமலம், என் ஒரே சகோதரனைக் காப்பாற்ற வேண்டும் என்னும் ஆசையினால் உனக்குச் சித்தியாக வந்து உன்னை என்னவெல்லாமோ பாடாய்ப் படுத்திவிட்டேன். காட்டில் நீ களைப்படைந்து விழுந்துவிட்ட போது உனக்கு உதவி செய்த கிழவி யார் தெரியுமா? நான்தான் அவளுக்குச் செய்தியனுப்பி உனக்குத் துணையாயிருந்து உதவி செய்யச் சொன்னேன். உன்னிடம் எங்கள் கதையைச் சொல்லி உதவி கேட்கலாம் என்றால் உன் மனத்தில் சித்தி என்றாலே 'கொடியவள் என்ற எண்ணம் ஆழமாய்ப் பதிந்து போயிருந்தது. ஆகவே, இதையெல்லாம் நான் உன்னிடம் மறைக்க வேண்டியதாயிற்று. என்னை மன்னிப்பாயா?" என்று கேட்டு இளைய ராணி கண்ணீர் பெருக்கினாள்.

"சித்தி, என்ன இது! நான் உங்களை மன்னிப்பதாவது? எனக்கு உங்களிடம் கொஞ்சங்கூட வருத்தம் இல்லை. பல நாட்களாகத் தொடர்ந்து கஷ்டப்பட்ட நாமெல்லோரும் ஒன்று சேர்ந்து விட்டோம். இந்தச் சந்தோஷத்தை உற்சாகமாகக் கொண்டாட வேண்டாமா?" என்று கேட்டாள் கமலம்.

"ஆமாம். அவசியம் கொண்டாட வேண்டும். இன்னும் ஒரு முக்கியமான காரியம் பாக்கியிருக்கிறது! என் அண்ணதானே உங்களையெல்லாம் இங்கே அழைத்து வந்தான்? அவனுக்கு ஒரு வெகுமதியளித்து நன்றி செலுத்த வேண்டாமா? உன்னைத்தான் அவனுக்கு வெகுமதியாக அளிக்கப் போகிறேன். உனக்கும் சம்மதந்தானே, கமலம்?"

சித்தி இப்படிக் கேட்டதும் கமலத்தின் முகம் நாணத்தினால் சிவந்தது.

ராஜகுமாரனுக்கும் கமலத்துக்கும் பிரமாதமாகக் கல்யாணம் நடந்தது. தேச தேசங்களிலிருந்தெல்லாம் பல மன்னர்கள் விஜயம் செய்திருந்தனர். கல்யாணம் ஆனதும் கமலமும் ராஜகுமாரனும் கப்பலேறித் தங்கள் நாட்டுக்குப் போனார்கள். இளவரசர்களும் இளைய ராணியும் அவர்களை உற்சாகமாக வழியனுப்பினார்கள். (முடிந்தது)

**1952க்கு**

**பெரியதும் அழகியதுமான முற்றிலும் புதிய**

# வாக்ஸால்கள்

ஒரே சீரான அளவு...

புதிய ஸ்டைலிங்-தாராள 5 ஸீட்டர் இடம்!

வனப்பு மிகுந்த உருவம், ஒரு முனை யிலிருந்து மற்றொரு முனை வரை எல்லாம் புதியது ... அதிக நீளமான சக்கர - அடித்தளம் மற்றும் விசாலமான பாடிகள் இவை அனைத்தும் அதன் விலை வரிசைகளில் இந்தப் புதிய வாக்ஸால்களை மகோன்னத பாக்கி யிருக்கின்றன.

**வெலாக்ஸ்**

மின்னல் வேக அக்ஸலரேஷன் மற்றும் சிறந்த ஓட்டம்.

**வைவெர்ன்**

குறிப்பிடத் தக்க சிக்கனத்துடன் ஓட்டமும் ஒருங்கே அமைந்தது.

*பிரும்மாண்டமான 5-ஸீட்டர்களாக அமைக்கப் பெற்ற தாவிலும் 6 பேர்கள் சௌகரியக் குறை வின்றி தாராளமாக அமரலாம்.*





## சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்

37, மவுண்ட் ரோடு, மதராஸ்

## டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிமிடெட்

மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம்



வெயிலைப்பற்றி
எனக்கு பயமில்லை



வீட்டிலே
போனிக்ஸ்
விசிறி இருக்கிறது





போனிக்ஸ்

(A.C & D.C) விசிறிகள்

ஸோல் ஏஜண்டுகள்

RM.S. & CO., LTD.,
16, BROADWAY MADRAS-1

மதுரை ஆபீஸ் :

5, மேல கோபுர வீதி
மதுரை





கல்கத்தா ஸினிமா எக்ஸ் சேன்ஜ் லிமிடெட் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ V. A. P. அய்யர் அவர்களது குமாரி சௌபாக்யவதி விசாலாக்ஷிக்கும் சிரஞ்சீவி N. S. கங்காதரனுக்கும் திருவாங்கூர்—கொச்சி தட்டமங்கலத்தில் 6-2-1952 அன்று விவாகம் வெகு விமரிசையாக நடந்தேறியது.

வாழ்க. விசாலாக்ஷி — கங்காதரன் !

# இலவசக் கல்வி போதனை

1. மெட்ரிக்குலேஷன். 2. S. S. L. C. 3. தமிழ் வித்வான். 4. E. S. L. C. (8-ம் வகுப்பு) 5. கைத்தறிநெசவு. 6. ஹோமியோபதி. 7. ஹிந்தி (52 ஆகஸ்ட்) 8. விவசாயம். 9. பேஸிக் ஆங்கிலம் முதலிய 1953-ம் வருட சர்க்கார் பரீட்சைகளுக்கு மாதக் கட்டணம், வகுப்புக் கட்டணமின்றி இலவசமாக தபால் மூலம் பயற்சியளிக்கப்படும். சர்க்கார் பரீட்சையின் வெற்றிக்கும், தொடர்ந்து பாடங்கள் அனுப்பி பயிற்சியளிக்கப் படுவதற்கும், உத்திரவாதப் பத்திரம் அளிக்கப்படும். தமிழ் எழுதப்படிக்கத் தெரிந்த ஆண், பெண் இருபாலரும் 31-3-52 முதல் ஆரம்பமாகும் இவ்வகுப்பின் முழு விவரங்களுக்கு 21-3-52க்குள் 2 அணா ஸ்டாம்புடன் எழுதி சேர்ந்து கொள்ளவும்.

**ஸ்ரீ முருகன் டுடோரியல் இன்ஸ்டிடியூட்**

ரிஷிவந்தியம் P. O.,
(via) திருக்கோவிலூர், S. A. Dt.

# வெகுளிப் பெண்

**துரோணன்**

மூன் பக்கத்து அறையின் ஜன்னல் கதவுகளைத் திறந்து கொண்டு வீதியையே வெறிச்சிட்டு நோக்கிக் கொண்டிருந்தாள் வேதம். அவளது குழந்தை யுள்ளத்தில் நடந்துகொண்டிருந்த மனப் போராட்டம் காரணமாகச் சற்று நேரத்துக் கொருதடவை நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள், பாவம்! திலுசு திலுசான பாவாடை, தாவணிகளெல்லாம் அணிந்து, காலில் செருப்பும், கையில் புத்தகக் கட்டுகளுமாகச் சென்று கொண்டிருந்த சிறுமிகளையும், அவளுடன் படித்த சக தோழிகளையும் நோக்கும் பொழுது—அவளுக்கும் அவர்களைப்போல் படிக்கப் போக முடியவில்லையே என்ற ஏக்கம் இராதா? பதினன்கே வயது நிரம்பிய அவளுக்கு, இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்புதான் —மஞ்சள் சரடு கழுத்தில் ஏறி யிருந்தது. இதுதான் அவளது மனப் போருக்குக் காரணம். அவளது கை அதை நெருடிய வண்ணம், அவள் சிந்தனையில் வெகுவாக ஆழ்ந்து விட்டாள்.

அவள் எட்டாம் வகுப்பு வரையில் படித்தாள். அழகான வண்ணத்திப் பூச்சி சப்பாத்திப் புதரையும், வாழைக் கன்றையும் சமமாக எண்ணி நெருங்குவது போல் தன் நிலையையும் இன்னல்களையும் பற்றி இதுவரை அவள் அறிந்ததில்லை. இன்று அவளது கழுத்திலிருந்த அழகான மஞ்சள் கயிறு அவளது குழந்தையுள்ளத்தில் பெரும் பிரச்னைகளையும் ஏக்கத்தையும் தோற்றுவித்து விட்டது.

அவளது மாமனுக்கும், இன்னும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும், அவளைப் படிக்க வைத்து ஒரு 'டீச்ச'ராகவோ, அல்லது ஒரு 'நர்ஸா'கவோ ஆக்கி விட்டால் கவலையற்று விடுமென்பது எண்ணம். இது ஒரு கடினமான தீர்மானம்தான். ஏனெனில், அவர்களது வம்சத்திலோ வழியிலோ இத்தகைய ஏற்பாடுகள் இருந்ததில்லை. அவளது தமையனர், தமக்கை முதலியவர்களுக்கோ, உலக சம்பிரதாயத்தை யொட்டிய மனோபாவம்.

அநேகம் தடவை அவளது தமையனும், தமக்கையும் கண்டித்துக் கேட்ட போதுகூட அவள் 'எனக்குப் படிப்பதில்தான் ஆசை!' என்று கூறிக் கொண்டிருந்தாள். பாவம்! அந்நிலைக்கு அவளை வைத்தது—அவளது சுற்றுப்புறம்தான். வாழ்க்கையைப் பற்றிய பயங்கரமான அபிப்பிராயங்களையே அவளது இளம் உள்ளத்தில் மாமன் முதலியோர் உரையேற்றி யிருந்தனர். தன் சுற்றுப் புறத்தைப் பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ சிந்தனைசெய்ய அவள் உள்ளத்தில் இடமில்லை.

ஒரு நாள் சலிப்படைந்த அவளது தமையனுக்குக் கடுங்கோபமூண்டுவிட்டது. "நான் சொல்லுகிறபடி நீ நடப்பதா யிருந்தால் உனக்கு எங்கள் ஆதரவுண்டு, இல்லையேல், நீ எங்களை மறந்து விடலாம்" என்று சற்று உஷ்ணமாகவே உரைத்தார். அடுத்த கணம் அவளது இளம் உள்ளம் வெருண்டு விட்டது.

எங்கோ பட்டணத்திலிருந்து ஒரு இரண்டாம்தார வரன் வந்திருந்தான். உத்தியோகமோ, செல்வாக்கோ கொஞ்சம் அதிகமானவன்தான். இருந்தாலும் அவனுக்கு வாய்த்திருந்த மூத்த தாரத்தின் மூன்று வாரிசுகளைப் பற்றிக் கொஞ்சம் பிரச்னை ஏற்பட்டது.

பின்னர், ஒரு ரயில்வே உத்தியோகஸ்தன். அவனுக்கும் கிட்டத்தட்ட இதே போன்ற நிலைமைதான். ஆனால் எல்லாம் நினைக்கிறபடி எல்லாம் நடக்கின்றதா? ஊரையும், உலகத்தையும் ஏமாற்றிப் பைத்தியமாக்கி வரும் சிற் சில சினிமா நட்சத்திரங்களின் பகல் வேஷங்களை உருவகப் படுத்தியிருந்த கண்களால் அவன் அவளை நோக்கினான். அதை அவன் வாய் விட்டும் கூறி விட்டான். பழைமையும் அடக்கமும் நிறைந்த அவளது தோற்றம் அவனை வெருண்டோடச் செய்தது போலும்! முடிவில் அவளது கழுத்திலிருந்த மஞ்சள் சரட்டிற்கு ஏழையான கல்யாணராமன்தான் காரணமானான். இதனால் அவளது மாமன் முதலியோர் பராமுகம் சாதித்து விட்டது அவள் நெஞ்சில் பயங்கரக் கனவுகளையே தோற்றுவித்துக் கொண்டிருந்தன. இன்று தன்னெதிரே பட்டுப் பூச்சி போல் சென்று கொண்டிருந்த தோழிகளைக் காணும் போது அவளது குழந்தையுள்ளம் ஏக்கமுற்றது. அவள் வெகுளி!

ஒரு மாதமாகி விட்டது. ஊர் உலகமெல்லாம் தீபாவளிப் பண்டிகையின் உற்சாகத்தில் மிதந்திருந்தன. முதல் நாள் வந்திருந்த அவளுக்குரிய 'அவ'னும் கூட உட்புறத்தில் குழந்தைகளுடன் ஏதேதோ அளவளாவிக் கொண்டிருந்தான். ஆனால் அவள்......



"நமக்குப் புதிதாக ஒரு வீடு கட்டணும் என்று எத்தனை தடவை சொல்லுவது? பேசாமல் இருக்கிறீர்களே!"

"என்னாலே முடியாது! யாராவது ஒரு கண்டிராக்டரைக் கூப்பிட்டுக் கட்டிக் கொடுக்கச் சொல்லி விடுகிறேன். பணம் கொடுத்து விட்டால் போகிறது!"



"அன்றைக்குப் பத்திரிகையிலே விளம்பரம் செய்தீர்களே, இராக் காவற்காரன் வேண்டுமென்று? அதற்கு ஏதாவது பலன் உண்டா?"

"ஆகா! உண்டு! அந்த விளம்பரம் செய்த மறுநாளே, எங்கள் ஆபீஸ் இரும்புப் பெட்டி களவு போய்விட்டது!"

வேதம் கொல்லைப்புறத்துக் கிணற்றங் கரைப் படிக்கட்டின் மேல் சிலைபோல் அமர்ந்திருந்தாள். மூன்று மாதங்களுக்கு முன் தோன்றி விட்ட சலனம் முடிவில்லாத பெரும் வட்டமான அலைகளாகப் பெருகிக் கொண்டிருந்தன. 'கணவன் — என்பது ஒரு பயங்கரமான பிராணி; தான் அவனுக்கொரு அடிமை; தன்னைப் பலரும் சேர்ந்து ஒரு பெரிய குளத்திலோ, அகழியிலோ தள்ளிவிட்டனர்—கையில் புத்தகக் கட்டுகளும், 'டிபன்' பாத்திரமுமாக அவனைத் துரத்திக் கொண்டு ஓடும் அந்த நாள் இனி எங்கே வரப்போகிறது?'—இவைதான் அவள் உள்ளத்தில் திரும்பத் திரும்பச் சுற்றிக்கொண்டிருந்த எண்ண அலைகள். இப்படியே அவள் எவ்வளவு நேரமாக உட்கார்ந்திருக்கிறாள் என்பது கூட அவளுக்குத் தெரியவில்லை.

புழக்கடைப் பக்கம் எதேச்சையாக வந்து கொண்டிருந்த கல்யாணம் மௌனமாக ஸ்தம்பித்து நின்றான். சிறிது நேரத்திற்குப் பின், மெல்லிய குரலில், "வேதம்" என்றான். அடுத்த கணம்—இந்தப் புதுக் குரல் அவளது சிந்தனையைக் குலைத்தது. பரபரப்புடன், பக்கத்திலிருந்த குடத்தைக் கயிற்றில் கட்டிக் கிணற்றிற்குள் விட்டாள். அவன் அவளை நெருங்கினான். "வேதம், அதோ பார்—அது என்ன?" என்றான் விரலால் சற்று தூரத்தில் எதையோ சுட்டிக் காட்டிக் கொண்டே.

அவளும் சற்றே நாணத்துடன் பதில் கூறினாள் முதன் முதலாக!

"அது பூசணிக் கொடி—"

"அது எப்படியிருக்கிறது பார்த்தாயா?"

"ஏன், அது நன்றாகத்தானிருக்கிறது.'

"ஊம்...சரி, அதோ குப்பைப் பள்ளத்திலிருக்கிறதே—அது என்ன?"

"அதுவும் பூசணிக் கொடிதான்!"

"அது எப்படி யிருக்கிறது?"

"எல்லாம் நன்றாகத்தானிருக்கிறது—நான் போகிறேன்; அக்கா வந்துவிடுவாள்—"

"ஏ பைத்தியம்! பதில் சொல்லாமல் நீ போய்விடுவாயா? இதைச் சொல்லி விட்டுப் போ — இந்தக் கொடிக்கும், அந்தக் கொடிக்கும் என்ன வித்தியாசம்?"

அவள் அறிவுக்கு இது கொஞ்சம் கஷ்டமான கேள்விதான். இருந்தாலும், பார்ப்பதைக் கூறுவதுதானே?

"எலுமிச்சை மரத்தைச் சுற்றிக் கொண்டே மேலே படர்ந்திருக்கும் கொடிதான் நன்றாயிருக்கிறது" என்றாள்.

"ஏன்?" என்றான் அந்த விடாக்கண்டன். இது இன்னும் கொஞ்சம் கடினமான கேள்விதான்.

"அது ஏனோ எனக்குத் தெரியாது" என்று அவள் கூறி முடிக்கும்போது, அவள் முகம் சிவந்து விட்டது. கையிலிருந்த மிச்சக் கயிற்றையும் கிணற்றுக்குள் செலுத்திக் கொண்டிருந்தாள். அவன் அதைப் பிடுங்கி, முழுக் கயிற்றையும் கிணற்றிற்குள்ளேயே போட்டு விட்டான்! அவள் மிரண்ட விழிகளுடன், கைகளை உதறிக் கொண்டே நின்றாள். "சரி, இப்பொழுதாவது பதில் சொன்னால்தான்!" என்றான் இலேசான பரிகாச நகைப்புடன்.

"ஐயையோ, அக்கா திட்டுவாளே அதைக் கொஞ்சம் எடுத்துத் தந்துவிட முடியுமா?" என்றாள் பரிதாபமாக வேதம்.

"நீ பதில் சொன்னால்தான்!"

அவள் சற்று யோசித்தாள். "அந்த மரம் பக்கத்திலிருப்பதால்தான் அந்தக் கொடி பெரிசாக வளர முடி......" என்று அவள் முடிப்பதற்குள்ளாகவே, 'சபாஷ்!' என்று முடித்தான் கல்யாணராமன். அவள் முகம் நாணத்தால் பின்னும் சிவந்தது. அடுத்த கணம் அவன் பர பரவென்று கிணற்றுக்குள் இறங்கிக் கவிழ்ந்திருந்த குடத்தையும் கயிற்றையும் எடுத்து உட்புறத்திலிருந்தே மேலே கொடுத்தான். அவள் குனிந்து அதை வாங்கிக் கொண்ட பின் மேலேறிவந்தான்.

"வேதம், இங்கே பார்—கிணற்றிலிருந்த இந்தக் குடத்தை என்னாலேயே எடுக்க முடியும்; இருந்தாலும், உன்னுடைய உதவியினால் எவ்வளவு சீக்கிரமாகக் கரையேறி விட்டேன்?" என்றான் கனிவுடன்.

அவளது குழந்தை யுள்ளம் குழைவடைந்து விட்டது. அறிந்தோ, அறியாமலோ அவளது உள்ளம் இச் சிறு சம்பவத்தால் மாறி, மூன்று மாதமாகக் குடி கொண்டிருந்த சலனம் விடை பெற்றுக் கொண்டு விட்டது. இடுப்பில் குடத்துடன், அவனைக் கூர்ந்து நோக்கிவிட்டு, "அக்காவிடம் சொல்ல மாட்டீர்களே?" என்றாள் கெஞ்சலாக.

"இல்லை யில்லை; குடத்தைக் கிணற்றில் போட்டு விட்டு என்னை இறங்கச் சொன்னதாக நான் சொல்லவே மாட்டேன்!" என்றான் கல்யாணராமன் குறும்புடன்.

தன் காந்த விழிகளில் பதிந்துவிட்ட நம்பிக்கையை அவன்மீது பதித்துக் கொண்டே உட்புறம் ஓடினாள், அந்தப் புதுமையடைந்த வெகுளிப் பெண்!

# மத்திய கேந்திரம்

**ஜெயமணி**

## மொராக்கோ

அட்லாண்டிக் மகா சமுத்திரத்துக்கும் மத்தியதரைக் கடலுக்கும் வாசற்படியாக விளங்கும் மொராக்கோ ஒரு சுதந்திர நாடு என்று கூறப்படுகிறது. அந்த நாட்டைப் பல வருஷங்களாக சுல்தான் முகமது யூசப் ஆட்சி புரிந்து வருகிறார்.

ஆனால், உண்மையில் அது சுதந்திர நாடு அல்ல என்பது சமீபத்தில் அங்கு நிகழ்ந்த சம்பவங்களிலிருந்து வெளியாகி விட்டது.

மொராக்கோ உள் நாட்டு விவகாரங்களின் நிர்வாகம் பிரஞ்சு அதிகாரிகளின் கையில் இருக்கிறது.

அந்த நாட்டில் இருக்கும் பிரஞ்சு ரெஸிடெண்ட் ஜெனரல் சுல்தானுக்கு வெளி நாட்டு மந்திரியாக இருக்கிறார். எனவே, மொராக்கோவின் வெளி நாட்டு விவகாரங்களும் உண்மையில் பிரஞ்சுக்காரர்களின் அதிகாரத்தில்தான் இருக்கின்றன.

இவ்விதம் பிரஞ்சு ஏகாதிபத்தியத்தின் காலனியாக இருக்கும் மொராக்கோவைச் சுதந்திர நாடு என்று கூறுவது வெறும் பிரசாரப் பகட்டேயாகும்.

சில மாதங்களாக அந்த நாட்டைச் சுற்றி ஒரு இரும்புத்திரை விழுந்திருக்கிறது என்று சொல்ல வேண்டும்! அதாவது அந்த நாட்டின் உண்மையான அரசியல் நிலைமையை வெளிநாடுகள் அறிந்து கொள்ள முடியாமல் தடுக்கப்பட்டிருக்கின்றன.

பல மாதங்களுக்கு முன் மொராக்கோ மக்கள் பிரஞ்சுக்காரர்களின் சர்வாதிகாரத்தை எதிர்த்துப் புரட்சி செய்தனர். உடனே அதைப் பிரஞ்சு அதிகாரிகள் கடுமையான பலாத்கார முறைகளைக் கைக்கொண்டு அடக்கி விட்டார்கள்.

இரண்டொரு நகரங்களின் மீது பிரஞ்சு விமானங்கள் வெடி குண்டுகளை வீசியதாகவும் தெரிகிறது.

அதிலிருந்து மொராக்கோவைப் பற்றிய செய்திகளை வெளி உலகம் அறிந்து கொள்வது கஷ்டமாகி விட்டது.

கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த மொராக்கோ யாருடைய நிர்வாகத்தில் இருக்கிறதோ அவர்கள் தான் ஜிப்ரால்டர் ஜலசந்தியையும் ஆப்பிரிக்கா — ஐரோப்பா தரைப் பாதையையும் நிரந்தரமாகத் தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்துக் கொண்டிருக்க முடியும்.

அதனால்தான் மொராக்கோ நாடு எக்காலத்திலும் வல்லரசுகளின் போர்க்களமாக இருந்து வந்திருக்கிறது. போதாக் குறைக்கு, அந்த நாட்டின் இயற்கை வளமும் ஆரோக்கியமான சீதோஷ்ண நிலையும் அன்னிய நாட்டினரை ஆகர்ஷித்தன.

எனவே கிறிஸ்து சகாப்தம் ஆரம்பமாவதற்கு முன்பிருந்து ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அது அன்னியர்களின் ஆதிக்கத்திலேயே இருக்க நேர்ந்தது.

ரோமிய சாம்ராஜ்யத்தில் ஒரு மாகாணமாக இருந்த மொராக்கோவில், பின்னர் அராபியர்களின் ஆதிக்கம் ஏற்பட்டது. அராபியர்கள் மொராக்கோ வழியாக ஸ்பெயின் மீது சுலபமாகப் படையெடுத்துச் சென்று, ஐரோப்பாவில் தங்களுடைய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள்.

அராபிய சாம்ராஜ்யம் மறைந்த பின், 1859-ம் வருஷம் மொராக்கோவுக்கும் ஸ்பெயினுக்கும் ஏற்பட்ட போரில், ஸ்பெயின் வெற்றி பெற்றது. எனவே மொராக்கோ ஸ்பெயினுக்கு இரண்டு கோடி டாலர் நஷ்ட ஈடு கொடுக்க நேர்ந்தது.

பிறகு பல நூற்றாண்டுகள் வரையில், மொராக்கோ யாருடைய ஆதிக்கத்தில் இருப்பது என்பது பற்றி ஐரோப்பிய வல்லரசுகளுக்குள் போட்டி ஏற்பட்டது. மேற்படி போட்டி பல சமயங்களில் யுத்தத்தில் முடியுமோ என்றும் தோன்றியது. எனினும் இறுதியில் அங்கு அதிர்ஷ்டசாலிகளான பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கமே நிலை பெற்றது.

படத்தில் காட்டியுள்ளபடி வடக்கு மொராக்கோவைச் சேர்ந்த ஒரு சிறு பகுதி மாத்திரம் ஸ்பெயினின் நிர்வாகத்தில் இருக்கிறது. அப் பகுதிக்கு டாஞ்சியர் தலைநகரமாக விளங்குகிறது.

1904-ம் வருஷம் பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. எகிப்தில் பிரிட்டிஷார் தங்கள் இஷ்டப்படி எதுவும் செய்வதற்குப் பிரஞ்சுக்காரர்கள் இசைந்தார்கள். அதற்குப் பிரதியாக பிரிட்டிஷார் மொராக்கோவில் பிரஞ்சுக்காரர்களுக்கு ஏக போக பாத்தியம் அளித்தனர்.

அன்னியர்களின் ஆதிக்கத்தை அடியோடு ஒழித்து, பூரண சுதந்திரம் பெறுவதற்காகவே இப்போது மொராக்கோ மக்கள் தீவிரமான புரட்சியில் ஈடுபட்டுள்ளனர்.



மொராக்கோ சுல்தான்




ஆப்பிரிக்காவில் ஐரோப்பாவிலிருந்து வெகு சமீபத்தில் உள்ள நாடு மொராக்கோ தான். மொராக்கோவின் வடக்கு முனையி லிருந்து கடலுக்கு அப்பால் உள்ள ஸ்பெயின் ஒன்பது மைல் தூரம்தான் இருக்கிறது.

சுமார் இரண்டு லட்சம் சதுர மைல் விஸ்தி ரணம் உள்ள மொராக்கோவில் சற்றேறக் குறைய ஒரு கோடி ஜனங்கள் வசிக்கின்றனர்.

அந்த நாட்டில் இஸ்லாம் மதத்தினரான அராபியர்களும் மூர் ஜாதியினருமே அதிக மாக இருக்கிறார்கள். மொராக்கோ நகரங் களில் மாத்திரம் லட்சக்கணக்கான யூதர்கள் வாழ்ந்து வருகின்றனர்.

அங்கு ஜனங்கள் கோதுமை, பார்லி விவசா யத்தையே முக்கியத் தொழிலாகக் கொண் டிருக்கிறார்கள். மேற்படி நாட்டில் ஆரஞ்சு, எலுமிச்சை, பேரீச்சம்பழங்கள் முதலியவை ஏராளமாகக் கிடைக்கின்றன.

மொராக்கோவில் பல ஆறுகள் இருக்கின் றன. ஆயினும் பெரும்பாலான ஆறுகளும் பாலைவனப் பிரதேசத்துக்குள் சென்றதும் வற்றிப் போய் விடுகின்றன.

அந்த நாட்டு மக்களில் பெரும்பாலோர் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள். எனி னும் பெஸ் நகரில் உள்ள சர்வகலாசாலை மாத்திரம் முஸ்லிம் உலகில் மிகப் பிரசித்தி பெற்று விளங்குகிறது.

கஸப்ளாங்கா, பெஸ், மர்ராகெஷ், மெக் னெஸ், ரபாட், டாஞ்சியர் இவைதான் மொராக்கோவில் உள்ள முக்கிய நகரங்கள்.

மொராக்கோ சுல்தானின் நாலு தலை நகரங்களில் மர்ராகெஷ் ஒன்றாகும். அந்த நகரில் மூர் ஜாதியினருடைய சிற்பச் சிறப் பின் சின்னங்களை இன்றும் காணலாம். மர்ராகெஷ் ஒரு காலத்தில் வட ஆப்பிரிக்கா சாம்ராஜ்யத்தின் தலைநகராக இருந்தது.

சுமார் மூன்று லட்சம் ஜனத்தொகையுள்ள கஸப்ளாங்கா வட ஆப்பிரிக்காவில் உள்ள முக் கியமான துறைமுகங்களில் ஒன்று. அந் நகரில் பதினாயிரக் கணக்கான ஐரோப்பியர் களும் இருக்கிறார்கள். 1943-ம் வருஷம் பிரிட்டிஷ் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச் சிலும் அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்டும் கஸப்ளாங்காவில் சந்தித்து, இரண்டாவது மகாயுத்தத்தின் எதிர்காலத் திட்டத்தை உருவாக்கியது ஞாபகமிருக்கலாம்.

டாஞ்சியரும் மொராக்கோவைச் சேர்ந்த துறைமுகங்களில் ஒன்று. ஸ்பெயினில் உள்ள ஜிப்ரால்டருக்கு நேர் எதிரில் டாஞ்சியர் இருப்பதால் அது முக்கியமான துறைமுக மாகக் கருதப்படுகிறது.

அந் நகரம் சர்வதேசப் பிரதிநிதிகளின் நிர்வாகத்தில் இருக்கிறது.

மொராக்கோ நாட்டின் மேற்கு எல்லை யாக விளங்கும் அட்லாண்டிக் மகா சமுத்தி ரம் உலகத்திலேயே பெரிய பசிபிக் மகா சமுத்திரத்துக்கு இரண்டாவதாகும். ஆனால் வர்த்தகப் போக்குவரத்தில் அட்லாண்டிக் சமுத்திரம்தான் முதல் ஸ்தானத்தை வகிக் கிறது. உலகில் தொழில் துறைகளின் இணை யற்று விளங்கும் நாடுகள் அதன் கரையில் அமைந்திருப்பதே அதற்குக் காரணம்.

இந்த மகா சமுத்திரம் சுமார் பதின்மூன்றா யிரம் மைல் நீளமும் நாலாயிரம் மைல் அகலமும் இருப்பதாக மதிப்பிட்டிருக் கிறார்கள். அதாவது இது பூமியின் மொத்தப் பரப்பில் ஐந்தில் ஒன்றுக்கு மேலாகும்!

# ஆதார சக்தி



நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தினசரி போஜனத்திற்குப் பிறகு ருசிகரமான வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் சாப்பிட்டு வந்தால் சொற்பகாலத்திலேயே தெம்பும் திடமும் அதிகரிப்பதை காண்பீர்கள். தேக உறுப்புகளுக்கு வலுவூட்ட அவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் உங்களுடம்பின் திராணி அதிகரிக்கச் செய்யும். களைப்பேற்படாமல் தெம்பூட்டி ஜலதோஷம், இருமல் வராமலிருக்க அதிக எதிர்ப்பு சக்தியும் பெற உதவுகிறது. இளையோர், முதியோர் யாவருக்கும் சிறந்த ஆரோக்கிய டானிக்.

**WATERBURY'S**
**COMPOUND**




வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
உங்களைத் தெம்புடன் வைத்திருக்கும்

NAS 737




## 15. பொன்னிக்கு ஆபத்து!

சிவப்பிரகாசம் அந்த வீட்டைச் சோதனை போட்டு வேதா இருக்குமிடத்தைத் தெரிந்து கொள்ள நினைத்தால் அதைத் தடுப்பதற்கு அப்பொழுது யாருக்கும் சக்தி இல்லை. அவரைத் தடுப்பவர்களுக்கு என்ன கதி நேருமென்பதற்கு அவருடைய கையிலிருந்த கத்தியே சாட்சி. முதலில் அவரைப் பார்த்தபொழுது 'நல்ல மனிதராக இருப்பார் போலிருக்கிறதே!' என்று நினைத்த பொன்னி இப்பொழுது 'இவர் எதற்கும் அஞ்சாத கிராதகராகத்தான் இருப்பார்!' என்ற முடிவிற்கு வந்தாள். அவரோடு அந்தச் சமயத்தில் தகராறு செய்வதோ, அவரைத் தடுப்பதோ உசிதமானதில்லை என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனால் வேதா எங்கேயிருக்கிறான் என்று தன் வாயால் சொல்வதற்கும் அவள் இஷ்டப்படவில்லை. அவரே சிரமப்பட்டு வேதா எங்கிருக்கிறான் என்று தேடும்படி விட்டுவிடுவதுதான் அச்சமயத்தில் அவளுக்கு நல்லதாகத் தோன்றியது.

"ஹூம். சரி, நானே பார்த்துக்கொள்கிறேன்" என்று உறுமிவிட்டுச் சிவப்பிரகாசம் மேஜை மீது இருந்த சிம்னி விளக்கைக் கையிலெடுத்துக் கொண்டு மாடிப் படியை நோக்கி நடந்தார். மரகதமும் செங்கம்மாவும் அறை வாசற்படிக்கு அருகே நின்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர். அவர்கள் இருவர் முகத்திலும் கலவரமும் பீதியும் தோய்ந்திருந்தன. "இனிமேல் நாம் என்ன செய்யலாம்...!" என்றாள் செங்கம்மா துடிப்புடன். மரகதம் ஒரு வழியும் புலனாகாதவளாய்த் தலையை அசைத்து, "நாம் என்ன செய்ய முடியும்!" என்றாள் தாழ்ந்த குரலில் குமுறலோடு.

பொன்னி மரகதத்தின் முகத்தைப் பார்த்தாள். இவ்வளவு காலும் மரகதத்திடம் ஏற்படாத இரக்கமும் பச்சாத்தாபமும் இன்று அவளுக்கு ஏற்பட்டது. மரகதத்தின் கடுமையான முகத்தில் எவராலும் அவ்வளவு சோகக் களையையோ பயத்தையோ உண்டாக்கி விடமுடியாது என்று அவள் நினைத்ததெல்லாம் வெறும் சொப்பனமாகத் தான் அவளுக்குத் தோன்றியது. எதற்கும் கலங்காத அந்த முகத்தில் தான் இப்பொழுது எவ்வளவு கலக்கம்! எவ்வளவு கலவரம்! எவ்வளவு சோகம்!

பொன்னி நெஞ்சில் ஒருவிதமான துணிச்சலை வரவழைத்துக் கொண்டு சிவப்பிரகாசத்தைப் பின் தொடர்ந்து மாடிக்குச் சென்றாள்.

சிவப்பிரகாசம் கையில் விளக்குடன் மாடியில் ஒவ்வொரு இடமாகப் பார்த்துக்கொண்டு வந்தார். பொன்னி வேதாவின் அறைக்குச் சமீபமாக நின்று கொண்டிருந்தாள். சிவப்பிரகாசம் மாடியில் எங்கெங்கோ சோதனை செய்துவிட்டு அங்கு வந்தபோது பொன்னி நிற்பதைக் கண்டார். அவர் தம் கையிலிருந்த விளக்கைத் தூக்கிப் பிடித்து அவள் முகத்துக்குச் சமீபமாகக் கொண்டு போய், "ஓ! நீயா! இங்கே வந்து விட்டாயா! அது கிடக்கட்டும். இப்பொழுது கேட்கிறேன். வேதா எங்கே இருக்கிறான், சொல்லிவிடு! இந்த ஏமாற்று வித்தை யெல்லாம் என்னிடம் பலிக்காது. நீ சொல்லாவிட்டால் அந்தச் செங்கம்மாவிற்கு என்ன நேர்ந்ததோ, அதே கதிதான் உனக்கும் நேரும்" என்றார்.

"இதெல்லாம் கௌரவமான ஆண்பிள்ளைகள் செய்யக் கூடிய காரியமா!" என்றாள் பொன்னி.

"எல்லோரும் என்னிடம் கௌரவமாக நடந்து கொண்டால் நானும் நடந்து கொள்வேன். செங்கம்மாவைப் போல் ஒரு ஸ்திரீ அப்படி நடந்து கொண்டால் நான் நடந்து கொண்டதில் தவறு என்ன! அது போகட்டும். நீ நல்ல பெண்ணாய் இருக்கிறாய். வேதா எங்கே இருக்கிறான்! சொல்லிவிடு" என்று கேட்டார் சிவப்பிரகாசம்.

"அதை நான் சொல்லக் கூடாது."

"ஹூம்...அப்படியா!" என்று சொல்லியபடியே வேதாவின் அறை வாசலில் போய் நின்று கொண்டு சிவப்பிரகாசம் அந்த அறைக் கதவைத் தள்ளினார். கதவு திறந்து கொண்டது. அறைக்குள் நுழைந்ததும் அவர் அப்படியே திகைப்படைந்து நின்றுவிட்டார்.

அப்பொழுது அவர் பார்த்துக் கொண்டிருக்கும் பெண், அவரைக் கண்டதும் திடுக்கிட்டு அச்ச

மடைத்து கட்டிலில் உட்கார்ந்து பரபரப்போடு விழிக்கும் அந்தப் பெண், அவர் ஆயுளில் என்றுமே காணாத அழகு உருவாக இருந்தாள். அந்த அழகான முகம் அவர் மூச்சைத் திணற வைத்தது. இருதயத்தை உலுக்க வைத்தது. நெஞ்சை நெகிழ வைத்தது. பேச நா எழவில்லை. "நீ தான்...நீதான் வேதாவா...!" என்று குழறினார்.

"ஆமாம்!" என்றாள் வேதா நடுங்கும் குரலில்.

சிவப்பிரகாசம் அங்கிருந்த மேஜைமீது விளக்கை வைத்து விட்டு, "வேதா!" என்று ஆர்வத்தோடு கூவிக் கொண்டே அவளை அணைத்துக் கொள்ள நெருங்கினார்.

அதைக்கண்ட வேதா, "என்னைத் தொடாதே!" என்று பயங்கரத்தோடு கத்தினாள்.

"வேதா! வேதா! நான்தான் உன் தகப்பன்..." என்றார் பதட்டத்தோடு சிவப்பிரகாசம்.

"என் தகப்பனாரா! என்னுடைய தகப்பனார் இறந்து எவ்வளவோ நாளாகிவிட்டதே!" என்று கூறியவாறே வேதா, சட்டென்று கட்டிலிலிருந்து கீழே குதித்து அவரிடமிருந்து அப்பால் ஒதுங்கி நின்றாள்.

"இல்லை, அவன் சாகவில்லை. இதோ இருக்கிறான். நான்தான் உன் தகப்பன். உன்னுடைய பெரியம்மா உன்னிடம் பொய் சொல்லியிருக்கிறாள், நான் இறந்து விட்டேன் என்று! வேதா, உன்னை ஏதோ படுகுழியில் வஞ்சனையாகத் தள்ளத்தான் அவள் இப்படியெல்லாம் உன்னிடம் சொல்லியிருக்கிறாள்" என்றார் சிவப்பிரகாசம் ஆத்திரத்துடன்.

வேதா எதுவும் புரியாமல் திகைத்தாள். பரபரப்போடு நான்கு புறமும் விழித்துப் பார்த்தாள். அப்பொழுதுதான் பொன்னி அந்த அறைக்குள் நுழைந்தாள். வேதா சட்டென்று பாய்ந்து அவளை அணைத்துக் கொண்டு, "பொன்னி! என் தகப்பனார் இறந்து விட்டாரல்லவா! இறந்து விட்டதாகப் பெரியம்மா சொன்னாளே! அவள் இப்படி என்னிடம் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்!" என்று பதட்டத்தோடு கேட்டாள்.

சிவப்பிரகாசம் பொன்னியைப் பார்த்து, "உனக்கு இங்கே என்ன வேலை! நீ வெளியே போகலாம்!" என்றார் கடுஞ் சீற்றத்துடன்.

"பொன்னி, போகாதே! எனக்குப் பயமாக இருக்கிறது!" என்று வீறிட்டுக் கதறினாள் வேதா.

'நான் போக மாட்டேன், வேதா! நீ பயப்படாதே!" என்று கூறி விட்டு வேதாவைத் தன் இரு கைகளாலும் அணைத்துக் கொண்டாள் பொன்னி.

"இதோ பார், பொன்னி! நான் என் மகளோடு தனியாகச் சில வார்த்தைகள் பேச வேண்டும். நீ இந்த இடத்தை விட்டுப் போக மாட்டாயா!" என்றார் சிவப்பிரகாசம்.

"முடியாது! நான் இங்கு இருக்க வேண்டுமென்று வேதா சொல்கிறாள். ஆகையால் நான் வெளியே போக முடியாது" என்றாள் பொன்னி மிகவும் கண்டிப்பான குரலில்.

"சரி, நீ இங்கே இருக்க வேண்டுமென்றால் வேதாவிடம் நான் யாரென்று தயவு செய்து சொல்லு. கீழே நடந்த பேச்சுக்களிலிருந்து நான் அவளுடைய தகப்பன்தான் என்பது சந்தேகமில்லாமல் உனக்கு விளங்கியிருக்குமே!" என்றார் உணர்ச்சி நிறைந்த குரலில் சிவப்பிரகாசம்.

"எதையும் வேதாவிடம் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. அவள் சொல்ல வேண்டியதை எல்லாம் நான் சொல்லுகிறேன்" என்று கூறியவாறே, மரகதம் அந்த அறையில் நுழைந்தாள். அவளைப் பத்திரமாகப் பாதுகாப்பவள் போல் அவளுக்குப் பின்னாலேயே வந்த செங்கம்மா சட்டென்று பொன்னியை நெருங்கி, "நீ இங்கே இருக்கக் கூடாது. கீழே சமையலறைக்குப் போய் உன் காரியங்களைக் கவனி" என்று சொல்லி அவளுடைய தோளைப் பிடித்துத் தள்ளினாள்.

பொன்னிக்கு அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள், என்ன நடக்கிறது என்பதையெல்லாம் கவனிக்க வேண்டுமென்ற ஆவல்தான். ஆனால் அந்தச்சமயம் அவள் பிடிவாதமாக அங்கே நின்றால் செங்கம்மாவிற்குப் பேய் போல ஆவேசம் வந்தாலும் வந்து விடும். தவிர சமையலறையில் இரவு செய்ய வேண்டிய காரியங்கள் அப்படியே செய்யப் படாமல் கிடந்தன. அவள் செங்கம்மாவின் வார்த்தைக்குக் கட்டுப் பட்டவள் போல் அந்த அறையை விட்டுச் சென்றாள்.

'இது எனக்குத் தெரியாமல் போய் விடுமா! ராத்திரி வழக்கம் போல் வேதாவைச் சந்தித்துக்



கேட்டால் எல்லாவற்றையும் தானே சொல்லி விடுகிறான்!' என்ற நினைப்புடன் பொன்னி சமையலறைக்கு வந்து தன் காரியங்களைக் கவனிப்பதில் ஈடுபட்டாள்.

ஒரு மணி நேரத்துக்குப் பிறகு சமையலறைக்குள் நுழைந்த செங்கம்மாவைப் பார்த்து, "சரி! அப்புறம் என்ன நடந்தது!" என்று பயத்தோடும் பயத்தோடும் கேட்டாள் பொன்னி.

செங்கம்மா பொன்னியை வெட்டி விடுபவள் போல் உற்றுப் பார்த்துக் கொண்டே, "என்ன நடந்தது! அந்தத் தடியன் இன்று ராத்திரி இங்கே தங்கி யிருக்கப் போகிறானும்!" என்றாள்.

"எப்பொழுது போகப் போகிறானும்!" என்று கேட்டாள்.

"நாளைக் காலையில் போய்விடுவான்!" என்றாள் செங்கம்மா.

"அவன்தான் தன் தகப்பன் என்று தெரிந்து கொண்டவுடன் வேதா என்ன சொன்னாள்!" என்று பொன்னி மிகக் கவலையோடு கேட்டாள்.

"உன் வாயைக் கொஞ்சம் அடக்கிக் கொள்" என்றாள் கோபத்துடன் செங்கம்மா.

"...வேதாவிற்குத் தன் தகப்பனைப் பற்றி எஜமானி அம்மாள் சொன்ன போது பெரிய திகைப்பாய்த்தான் இருந்திருக்கும்..." என்றாள் பொன்னி அவள் வார்த்தைகளைக் கவனிக்காதவள் போல.

"உனக்கு இதை யெல்லாம் பற்றி என்ன கவலை!" என்றாள் செங்கம்மா.

"நான் வேறு ஒருவருக்காகவும் கவலைப்படவில்லை. வேதாவிற்காகத்தான் கவலைப்படுகிறேன். அவன் இரவு இங்கு தங்கப் போகிறானென்றால் படுப்பதற்கு இடம்...!" என்றாள் பொன்னி.

"எஜமானி அம்மாவின் அறைக்குப் பக்கத்திலிருக்கிற அறையை ஒழித்துக் கொடுத்து வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டுத்தான் வந்திருக்கிறேன்" என்றாள் செங்கம்மா. பிறகு இரண்டு தட்டுகளில் ஆகாரத்தை எடுத்துக் கொண்டு அவள் அங்கிருந்து கிளம்பி விட்டாள்.

பொன்னி சாப்பிட்டு விட்டுத் தன் அறைக்குச் சென்றாள். ஆனால் அவளுக்குத் தூக்கம் பிடிக்கவே யில்லை. எப்படித் தூக்கம் வரும்! சாதாரண நாளிலேயே அந்த வீட்டில் அவளுக்குத் தூக்கம் வருவது சிரமம். அன்று ஒரு புதிய மனிதர் வந்து 'நான்தான் வேதாவின் தகப்பன்' என்று சொல்லி எல்லோரையும் கலங்க வைத்தது சாதாரண விஷயமா...! இதன் முடிவு என்ன ஆகும்! உண்மையிலேயே அவன் வேதாவின் தகப்பன்தானு! வேதாவின் தாயை அவன் கொன்று விட்டு அவளையும் குழந்தைப் பருவத்திலேயே விட்டு விட்டுப் போய் விட்டானுமே! கிராதகன்! முதன் முதலில் பார்க்கும் பொழுது மிகவும் நல்லவன் போல் பொன்னியின் மனதிற்குப் பட்ட சிவப்பிரகாசம் இப்பொழுது மகாக் கொடியவனாகத் தோன்றினான். ஆரம்பத்தில் கண்ணியமான பெரிய மனிதன் போல் தோன்றிய அவன் மரகதத்தோடு பேசும் போது கொலைகாரன் மாதிரி மாறி விட்டது பொன்னிக்கே வியப்பை யளித்தது. இத்தகைய மனிதனு வேதாவின் தகப்பன்! பொன்னியின் சிந்தனைக்கு முடிவே ஏற்படாமலிருந்தது.

இரவு நெடு நேரத்திற்குப் பிறகு அந்த வீட்டில் வழக்கமாக ஏற்படும் பேய் அமைதி நிலவியதும் பொன்னி வேதாவின் அறையை நோக்கிப் புறப்பட்டாள்.

வேதாவின் அறையிலுள்ள விளக்கு அடக்கமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஆனால் அங்கு சூழ்ந்திருந்த இருள் அந்தச் சிறிய ஒளியை விழுங்கிவிட நினைக்கும் பெரும் பேய் போலிருந்தது.

அறை வாசலை அடைந்ததும் பொன்னி "வேதா!" என்று மெதுவான குரலில் கூப்பிட்டாள்.

"பொன்னியா! வா!" என்று வேதாவின் ஆர்வத்தோடு கூடிய குரல் கட்டில் கிடந்த பக்கத்திலிருந்து வந்தது.

பொன்னி மெதுவாக அறைக் கதவைச் சாத்திவிட்டு மேஜைமீது இருந்த விளக்கின் ஒளியைச் சிறிது பெரிதாக்கி விட்டுக் கட்டிலில் உட்கார்ந்திருந்த வேதாவின் அருகில் சென்றாள்.

வேதா சட்டென்று பொன்னியின் இரு கைகளையும் பிடித்துத் தன்னருகில் இழுத்துக் கட்டிலில் உட்கார வைத்துத் தன்னோடு அணைத்துக் கொண்டாள்.

"பொன்னி! இந்தச் சமயத்தில் நீ வ ந்தில் எனக்கு எவ்வளவு சந்தோஷம்,





"ஏன் ஐயா, திருடன் வந்து உங்களை அடித்தபோது உங்கள் கை பூப் பறிக்கவா போயிருந்தது? அப்படியே இரண்டு கையாலேயும் அவன் கழுத்தைப் பிடித்து நெரித்திருக்கக் கூடாதா?"

"எப்படி ஸார், முடியும்? வெறுங் கையாக இருந்தால் அப்படிச் செய்திருப்பேன். நான்தான் ஒரு கையில் தடியும் இன்னொரு கையில் உலக்கையும் வைத்துக் கொண்டிருந்தேனே!"

தெரியுமா! நினைத்தேன் நீ வருவாய் என்று!" என்று நெஞ்சு நெகிழச் சொன்னாள் வேதா.

"நீ நினைத்ததில் தப்பில்லை. அதுவும் இன்று ராத்திரி உன் அறைக்கு வருவதை யாரைப் படைத்த கடவுள் வந்து தடுத்திருந்தாலும் நான் லட்சியம் செய்திருக்க மாட்டேன். அதுபோகட்டும். நடந்த கதைகளை யெல்லாம் விவரமாகச் சொல்லு!" என்றாள் பொன்னி.

"பொன்னி, எனக்கு ஒன்றும் புரியவில்லை! எல்லாம் பயங்கரமாக இருக்கிறது. எனக்கு அ-ரைப் பார்த்தாலே வியப்பாகவும் அதிச---கவும் இருக்கிறது!" என்றாள் குழப்பத்தோ--டு வேதா.

"உன் தகப்பன் என்று -சால்லிக் கொள்கிறானே. அவனைத்தானே -சால்கிறாய்!"

"ஆமாம், பொ--னி! அவரிடம் நான் பயப்பட்டது போ-ல் என் பெரியம்மாவிடம் கூடப் பயந்ததில்லை. அவரும் பெரியம்மாவும் பேசிய வார்த்தைகள் அனைத்தும் மிகவும் பயங்கரமானவை!" என்றாள் வேதா நடுங்கிக்கொண்டே.

"பதிலுக்கு உன் பெரியம்மா என்ன சொன்னாள்!" என்று கேட்டாள் பொன்னி.

"அவள் இருதயபூர்வமாக என் தகப்பனார் இறந்துவிட்டதாகவே கருதினதாகவும் இப்படி ஒரு கொடிய மனிதன் உலகத்தில் இருப்பதைவிட இறந்து போவதே எத்தனையோ பேருக்கு நன்மையை உண்டாக்குமென்றும் சொன்னாள்......"

"உங்கள் பெரியம்மா சொன்னது நூற்றுக்கு நூறு உண்மையான வார்த்தை. அவன் இருப்பதனால் ஒருவருக்குமே நன்மை இல்லை. ஆனால் இச் சமயத்தில் அவன் உன் தகப்பன் என்று சொல்லிக் கொள்வதால் நமக்கு ஒருவிதத்தில் உதவி ஏற்படலாம். உன் தகப்பனார் என்ற முறையில் அவன் டாக்டர் பரசுராமனை நீ கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதம் அளித்தால்..." என்று சொல்லிப் பொன்னி வேதாவின் முகத்தைப் பார்த்தாள்.

இதைக் கேட்டதும் வேதா திடுக்கிட்டாள். அவள் முகத்தில் ஒரு கலக்கமும் பயமும் தோன்றின. "இல்லை, இல்லை! பொன்னி, அதை நினைக்கத்தான் பயங்கரமாக இருக்கிறது. அதுதான் சங்கடமாக முடிந்து விட்டது" என்றாள்.

"ஏன், என்ன நடந்தது!" என்றாள் பொன்னி திகைப்படைந்து.

"அவர் நாளைய தினம் இங்கிருந்து என்னை அழைத்துக் கொண்டு போகப்போகிறாராம்."

"உன்னை அழைத்துக் கொண்டு போகப் போகிறாரா! எங்கே!"

"பம்பாய்க்கோ கல்கத்தாவிற்கோ அழைத்துக் கொண்டு போகப் போகிறாராம்."

"என்ன! நிஜமாகவா...!" — பொன்னியின் பதைப்பு அதிகமாயிற்று.

"ஆமாம்! நான் ரொம்ப அழகாக இருக்கிறேனும். நான் இவ்வளவு அழகாய் இருப்பேனென்று அவர் நினைக்கவில்லையாம். என்னைப் போன்ற பெண்களைப் பம்பாய் கல்கத்தாவிலுள்ள எத்தனையோ கோடீசுவரர்களெல்லாம் 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு கல்யாணம் செய்துகொள்ள ஆசைப்படுவார்களாம்......"

பொன்னி ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக் கொண்டே வேதாவின் முகத்தைப் பார்த்தாள். வேதாவின் வினையறியாத முகத்திலிருந்து அவள் எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. "நான் உங்களோடு வர முடியாது என்று நீ சொல்லுவதற்கு என்ன!" என்று கேட்டாள்.

"அதை யெல்லாம் அவரிடம் நான் எப்படிச் சொல்லுவது, பொன்னி!" என்றாள் வேதா துயரம் தோய்ந்த குரலில்.

"வேதா! நீ ஒரு பைத்தியக்காரி; அசட்டுப் பெண். ஏன் சொல்லக் கூடாது!"

"அதைச் சொன்னால் நம்முடைய ரகசியமெல்லாம் வெளியாகிவிடும். நான் உன் வீட்டிற்கு வந்தது, டாக்டரோடு பேசியது எல்லாம் வெளியாகி விடும். அதனால் ஏதாவது ஆபத்து ஏற்பட்டால்......"

"ஆபத்தா! என்ன ஆபத்து நேர்ந்துவிடப் போகிறது! வருகிற ஆபத்து வரட்டுமே! இனிமேல் நாம் வாயைப் பொத்திக் கொண்டிருப்பதுதான் பெரிய ஆபத்து. வேதா, அப்படியானால் நீ டாக்டரைப் பற்றிக் கொஞ்சம் கூட உன் தகப்பனிடம் தெரியப்படுத்தவில்லையா!"

"அதை எப்படிச் சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை. சொல்லவும் பயமாக இருந்தது..."

"சரி, அதனால் பாதகமில்லை!" என்று சொல்லிக் கட்டிலைவிட்டு எழுந்து "இதோ நானே போய் எல்லாவற்றையும் விவரமாக அவனிடம் சொல்லுகிறேன்" என்று கிளம்பினாள் பொன்னி. வேதா சட்டென்று அவள் கையைப் பிடித்து நிறுத்தி, "வேண்டாம், பொன்னி!" என்று கெஞ்சினாள்.

"வேண்டாமா! ஏன் உனக்கு டாக்டரைக் கல்யாணம் செய்து கொள்வதில் இஷ்டமில்லையா! இந்த வஞ்சகக்காரனோடு பம்பாய்க்கோ கல்கத்தாவிற்கோ போய்க் குட்டிச்சுவராகத்தான் இஷ்டமா! ஊஹும், நீயும் ஒரு துரோகிதான்; ஒரு வஞ்சனைக்காரக் கள்ளிதான்!" என்று கோபத்துடன் பொரிந்து தள்ளினாள் பொன்னி.

"பொன்னி, என்னை அப்படி நினைக்காதே!" என்றாள் வேதா கண் கலங்க, நாத் தழுதழுக்க.

"அப்படியானால் எனக்கு உங்களோடு வர இஷ்டமில்லை என்று நீ அவளிடம் சொல்ல வேண்டியது தானே!" என்றாள் பொன்னி.

"நான் எதற்காகச் சொல்ல வேண்டும்! பெரியம்மாவே என்னை அவரோடு அனுப்ப மாட்டேன் என்று சொல்லித் தர்க்கம் செய்து கொண்டிருக்கிறாளே! அவளை மீறி அவர் என்னை அழைத்துக் கொண்டு போய்விட முடியுமா!" என்றாள் வேதா.

"வேதா, நீ ஒரு அசடு. உன் பெரியம்மாவின் கண்டிப்பிற்கும் பொல்லாத் தனத்திற்கும் நீயும் நானும் வேண்டுமானால் பயப்பட்டு அடங்கி நடக்கலாம். அவன் அப்படிப்பட்டவனல்ல. ராட்சதன். உன் பெரியம்மாவைக் கொலை செய்து விட்டுக் கூட உன்னை அழைத்துக் கொண்டு போய்ச் சந்தைக் கடையில் விற்று விடுவான். இனிமேல் எதையும் அடக்கி வைத்துக் கொண்டிருப்பதில் புண்ணியமில்லை. இதோ நான் போய்ச் சொல்லுகிறேன்" என்றாள் பொன்னி.

பயத்தால் பொன்னியைப் பிடித்துக் கொண்டு நின்ற வேதாவின் கைகள் நடுங்கின. "இப்பொழுது அவர் தூங்கிக் கொண்டிருப்பாரே!" என்றாள் நடுங்கும் குரலில்.

"அவன் தூங்கிக் கொண்டிருந்தால் என்ன! அவனை எப்படி எழுப்புவது என்று எனக்குத் தெரியும். என்னை விடு. நான் போகிறேன்" என்று வேதாவின் கையை உதறி விட்டுக் கிளம்பினாள்.

"பொன்னி, வேண்டாம். ஏதேனும் உனக்கு ஆபத்து ஏற்படும்" என்று வேதா மன்றாடினாள்.

"எனக்கா ஆபத்து! ஒரு ஆபத்தும் ஏற்படாது. நீ கவலைப்படாதே!" என்று படபடப்போடு சொல்லி விட்டுக் கண நேரத்திற்குள் இருளில் சென்று மறைந்தாள் பொன்னி. (தொடரும்)

# அவன் யுக்தி!

அன்று நாங்கள் நான்கைந்து பேர் உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தோம். இடையே செங்கல்வராயனைப் பற்றிப் பேச்சு வந்தது. "தெரியுமோ, இல்லையோ? செங்கல்வராயன் இப்பொழுது ஆள் அடியோடு மாறிவிட்டான், அப்பா!" என்றான் ஒரு நண்பன்.

"ஆமாம், அப்பா! முன்பு அவன் இருந்த செட்டு என்ன, சிக்கனம் என்ன? நாலைந்து நாட்கள் முன்பு என்னைப் பிடிவாதம் பிடித்து வீட்டுக்கு அழைத்துப் போய் ஏகத் தடபுடலாக விருந்து செய்து வைத்தான், அப்பா!" என்று ஆமோதித்தான் இன்னொரு நண்பன்.

இப்படியாக கூடியிருந்த நண்பர்களனைவரும் செங்கல்வராயன் செய்துவைத்த விருந்தைப் பற்றிச் சொல்லவே எனக்கு அதிசயமாக இருந்தது. ஏனெனில் செங்கல்வராயனின் குணம் எனக்கு நன்றாகத் தெரியும். அவன் சிக்கனத்துக்குப் பேர் போனவன். அந்த விஷயத்தில் அவனைவிட அவன் மனைவி இன்னும் ஒரு படி மேலே போனவள். அவனுக்குக் கல்யாணமாகி இன்றைக்குக் கால் டஜன் வருஷத்துக்கு மேலாகி விட்டது. இது வரை அவன் தன் நண்பர்களில் யாரையும் கூப்பிட்டு ஒருவேளை சாப்பாடு கூடப் போட்டது கிடையாது. அப்படிப் பட்டவன் அன்றாடம் குறைந்தபக்ஷம் ஒரு நண்பனுக்காவது விருந்து வைக்கிறான் என்றால் அது அதிசயமாக இராதா?

இப்படி நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே, செங்கல்வராயன் ராமசாமியை அழைத்துக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தான். அன்றைக்கு ராமசாமிக்குச் செங்கல்வராயனின் வீட்டிலே விருந்து என்பது அவர்களைப் பார்த்ததும் எங்களுக்குச் சொல்லாமலே விளங்கி விட்டது.

செங்கல்வராயன் என்னைப் பார்த்ததும், "அட! உனக்கு நூறு வயசுடா? உன்னைத் தான் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். நாளைக்கு மத்தியானம் நீ நம் வீட்டுக்குச் சாப்பிட வந்து விட வேண்டும். தெரியுமா?" என்றான்.

வருகிற விருந்தை யாராவது வேண்டாம் என்பார்களா? அதுவும் இந்த ரேஷன் காலத்தில்? இருந்தாலும் சற்று 'பிகு'வுடன், "உன் வீட்டுக்குச் சாப்பிட வர என்னால் ஆகாது, அப்பா!" என்றேன்.

"டேய், டேய்! அப்படிச் சொல்லி விடாதேடா! எனக்குத் தெரிந்தவர்கள் எல்லாரையும் கூப்பிட்டுச் சாப்பாடு போட்டாகி விட்டது. நீ ஒருவன் தான்டா பாக்கி!" என்றான் அவன்.

"முடியாது என்றால் முடியாது தான்!" என்றேன் நான் இன்னும் அழுத்தமாக.

"அதெல்லாம் விடமுடியாது. நீ வந்து தான் ஆகவேண்டும். நாளைக்கு உன்னை விடப் போவதில்லை. அதற்கு மறுநாள் முதல் 'கூப்பிட்டுச் சாப்பாடு போட ஆள் வேறு யாரும் இல்லையே!' என்பதை நினைக்கும் பொழுது இன்னும் கவலையாக இருக்கிறதடா?" என்றான்.

"என்னடா! ஏதாவது பிரார்த்தனையோ?" என்று கேட்டேன்.

"இல்லையப்பா! நான் தான் செட்டு என்றால் என் மனைவி அதைவிடச் செட்டாயிருக்கிறாள். தினமும் வேப்பம்பூ ரசந்தான். இந்த மூன்று வருஷ காலமாக அதையே சாப்பிட்டுச் சாப்பிட்டு என் நாக்குச் செத்து விட்டது. ஆகவே, இப்பொழுதெல்லாம் என் மனைவியின் கையினால் ருசியாகச் சாப்பிட வேண்டுமானால் இந்த யுக்தியைத்தான் கையாள வேண்டியிருக்கிறது! நாளைக்கு ஏமாற்றி விட மாட்டாயே!" என்று அவன் என்னைப் பார்த்துப் பரிதாபமாகக் கேட்டான்.

பாவம், அவன் கதியை நினைத்தால் பரிதாபமாயிருக்கிறதல்லவா? —அக்ஷயம்.

# பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது




நிக்ஸோடேர்ம் கண்டு பிடிக்கப் பட்டதிலிருந்து இனி யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டிகள் ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடேர்மினால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனுயாசமாக வைத்துக் கொண்டு, பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் கொடுக்காதீர்கள்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடேர்ம் ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் கண்டு உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவிக் கொள்ளும்போது ஒரு பவுடரைப் போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தைத் தாக்குகிறது. நிக்ஸோடேர்ம் மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைத் தாக்கிக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷங்களில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப்போல வழுவழுப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடேர்ம் வேறெதையும்விட சீக்கிரமாக வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சல் ஆகியவற்றை சில நிமிஷங்களில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி—நாடிய வைத்தியம் கிடைத்ததை உணருவீர்கள். நிக்ஸோடேர்ம் ஆயிரக்கணக்கானவர்களுடைய சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "பன்னிரண்டு வருஷங்களாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பிறகு நிக்ஸோடேர்ம் உபயோகித்தேன். 10 நிமிஷங்களில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தில் ஏற்பட்ட மாறுதலைக்கண்ட என் நண்பர்கள் ஆச்சரிய மடைந்தனர்."

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்திகரமாக சுத்தமாகாதவரை நிக்ஸோடேர்ம் மதிப்பை இழக்கிறது. இன்றே ஒரு நிக்ஸோடேர்ம் வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் கண்டு ஆச்சரியப் படுவீர்கள். மேலும் ஒரு வாரத்திற்கு உபயோகித்தால் சருமம் வழுவழுப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் அதன் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, நீங்கள் கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே ஒரு நிக்ஸோடேர்ம் வாங்குங்கள். அதற்களித்த உத்தரவாதமே உங்களுக்கு உறுதி.

---

## உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நல்ல வழி



அமெரிக்கன் மாடல் பிஸ்டல், லைசென்ஸ் அவசியமில்லை. டிராமா, சர்க்கஸ், பணத்தைக் காப்பாற்றிக் கொள்ள, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இதற்கு மிஞ்சிய சிநேகிதனில்லை. சுட்டபொழுது நிஜமான பிஸ்டல் மாதிரி பயங்கரமான சப்தம் உண்டாகி நெருப்பு ரவைகள் வெளிவரும். விலை 8-8-0 போஸ்டேஜ் 1-8-0 தனி. தோல் பெட்டி 2-8-0. பிஸ்டலுடன் 25 குண்டுகள் இலவசம். தனியாக தோட்டாக்கள் வேண்டுமானால் 1 டஜன் 1-8-0.

## வீட்டில் சினிமா (புரோஜக்டர்)



வீட்டிலேயே சினிமா பார்த்து ஆனந்த மடையலாம். இந்த சலனப் படங்களை திரையின்மேல் பார்க்கலாம். இது பிரகாசமாகவும், கவர்ச்சிகரமாகவும் பிரதிபலிக்கிறது. விலை ரூ. 7-8-0 வி. பி. பி. சார்ஜ் ரூ. 2-0-0. மேற்கொண்டு பிலிம் கெஜம் 1-க்கு அணா 8 தனி.

## கொசு வலை

கொசுக்கடியின் உபத்திரவத்திலிருந்து எங்களது உயர்ந்த ரக வலையினால் காப்பாற்றிக் கொள்ளுங்கள். வெளியிடங்களில் ரூ. 15க்கு கூட கிடைப்பது கஷ்டம். விலை ரூ. 7-8-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

## 14 பாஷைகள் 48 மணி நேரத்தில்

ஆங்கிலம், ஹிந்தி, மராத்தி, குஜராத்தி, பர்மீஸ், தமிழ் முதலிய பாஷைகளை 48 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. வி. பி. பி. சார்ஜ் அணா 12.

## எலக்ட்ரிக், ரேடியோ கைட்

மின்சார சக்தியின்றி இயக்கக் கூடிய ரேடியோவை ரூ. 15 செலவிலேயே தயாரியுங்கள். ரேடியோ ரிப்பேர், எலக்ட்ரிக் ஒயரிங் முதலியவைகளைக் கற்றுக்கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை ரூ. 4-4-0. வி. பி. பி. சார்ஜ் அணா 12 தனி.

## தொழில் புஸ்தகங்கள்

சோப் தயாரிக்கும் முறை ரூ. 3. வாசனை திரவியங்களுக்கானது ரூ. 3. தையல், கட்டிங் முறை ரூ. 3-8-0. போட்டோகிராபிக் ஆசான் ரூ. 3. டிராயிங், பெயிண்டிங் ரூ. 4. ரப்பர் தொழில் ரூ. 3. வி. பி. பி. சார்ஜ் தனி.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்

**SANSAR TRADING Co., (P. 11) Kanwariganj, Aligarh U. P.**

# தாயின் மனம்

மாயா

தொட்டிலில் கிடந்த குழந்தை திடீரென்று விழித்துக் கொண்டதும் வீறிட்டு அழுதது. அதன் 'வீல்' என்ற ஒலம் தூக்க மயக்கத்திலிருந்த ராதைக்கும் விழிப்பைக் கொடுத்தது. தொட்டில் தொங்கிய பக்கம் நோக்கிப் புரண்டு படுத்தாள். கால்களைப் பின்னிக் கொண்டு கிடந்த குழந்தை நெஞ்சு காய்ந்து போய் அலறிற்று. பரிவோடு அதன் அருகில் சென்று பால் கொடுக்கும் பக்குவத்தில் ராதையின் மனநிலை இல்லை. குழந்தை பிறக்கு முன்னரே அவள் மனத்தில், அதன் மேல் ஒரு துவேஷம் வளர்ந்து விட்டது. குழந்தை பிறந்த வேளை அப்படிப்பட்ட வேளை. தன் பெண்மையைத் தாய்மை தேடி வந்து கூடிய பொழுது, வயிற்றிலிருந்த அந்த முகமறியாத பிண்டத்தின் மீது தன் ஆசையையும் பாசத்தையும் அள்ளிச் சொரிந்திருந்தாள். கனவாகிய தொட்டிலில் சிந்தனைக் கயிறு கட்டி அதைத் தாலாட்டியிருக்கிறாள். தனக்குப் பிறக்கப்போவது 'ஆணு, பெண்ணு' என்று அறியாத நாளிலிருந்தே, அதன் நிறம், அழகு ஆகியவை எப்படி அமைய வேண்டும் என்ற மனோராஜ்யத்தில் பெரும் பொழுதைப் போக்கியிருக்கிறாள். கற்பனையிலே தான் வரித்த குழந்தையைத் தெருக் குழந்தைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து மகிழ்ந்திருக்கிறாள்.

அவர் அழகுக்கு அவரை மட்டும் கொண்டு பிறந்து விட்டால் பின் 'பேசும் பொற் சித்திரம்' தான் என்றெல்லாம் ராதை நினைத்திருந்த நாட்கள் பல. எல்லாம் கொடிப் பொழுதில் கடந்த சதி யொன்றில் 'பொய்யாய், பழங்கதையாய், கனவாய்' முடிந்து விட்டது. ராதையின் ஆசையெல்லாம் அவலமாகி விட்டது. தன் வாழ்வின் முழுமலர்ச்சிக்கும் எதன் பிறப்பை எதிர்பார்த்து நம்பியிருந்தாளோ, அது முதலையே விழுங்கிவிட்டது. அன்று தொடங்கி அவள் அன்பெல்லாம் விஷமாகி விட்டது.

'கண்ணே, கரும்பே' என்று கன்னச் சதையைச் சிவக்க வைக்கும் இன்பத் தொல்...
தன்னை ஆளாக்கிக் கொள்...
'துக்கிரி, பீடை' என்ற பழி...
களை ஏற்றுக் கொள்ளத்...
தக் குழந்தை பிறந்தது. ...
குக்குக் குறைவில்லை. அ...
குறைவில்லை. முகத்தில் ...
வீசியது. 'அவரை' ...
உரித்து வைத்து, வார்ப்ப...
திருந்தது குழந்தை. அவள் ...
ரகுவை நினைவுப்படுத்த நாம் ...
விட்டோமே என்று எண்ணி...
அவனை விழுங்கி விட்டதோ?

குறுகிய காலத்துத் தாம்பத்...
வாழ்வின் பலன் போன்ற ...
குழந்தையின் பிறப்பை அவள்...
பிவே இல்லை. அது பிறந்த உ...
இறந்திருக்கக் கூடாதா என்று...
ஒரோர் சமயத்தில் ராதை ...
விட்டாள். ஆனால் கு...
அவளுக்கும் ரகுவுக்கும் ...
விட்டது. புரையோடி...
நீறி விட்டு 'ஆபரே...
அங்கு ஏற்படும் தழும்... அது வளர்ந்த கதை, அது தந்த வேதனை, அதன் முடிவு இவற்றையெல்லாம் எடுத்துச் சொல்லும் நினைவுச் சின்னமாக விளங்கி வருவது போல, அந்தக் குழந்தை பழைய இன்ப நாட்களின் நிகழ்ச்சிகளை ராதையின் எதிரில் கொண்டு நிறுத்தி மனத்தில் மிருந்த உளைச்சலை உண்டு பண்ணிற்று. ராதையின் நினைவுக்கொடி பழைய சம்பவங்களைப்பற்றிக் கொண்டு படரத் தொடங்கியது.

* * *

பிறக்கப் போகும் குழந்தையின் பேரில் வாஞ்சை சுரப்பது பெண்களுக்கே இயல்பான அம்சம். ரகுவுக்கும், தான் தந்தையாகப் போவதில் பெருமிதம் தலைதூக்கி நின்றது. குழந்தை பிறக்குமுன்பே அதன் பேரில் கொள்ளை ஆசை! பிறப்பது ஆணாயிருந்தால் இப்படி, பெண்ணாயிருந்தால் இப்படியிப்படி என்றெல்லாம் இருவரும் திட்டம் போட்டிருந்தனர்.

ரகுவும் ராதையும் கூடி வாழ்ந்த வாழ்க்கைதான் எப்படியிருந்தது! ஒரு சிறு புயல்கூட வீசியது இல்லை. தவழ்ந்து வந்த தென்றலில் மிதந்து சென்றது வாழ்க்கை. புது மண வேகம் புலன்களுக்குப் பூரிப்பை யளித்தது. பாட்டும் கருவும் ஒன்று கலந்து இன்ப கீதம் இழைவது போல அவ்விருவரின் சொல்லும் செயலும் ஒரே குரல் பேசின. ராதைக்கே சில சமயம் தன் வாழ்க்கை விசித்திரமாகத் தோன்றியதுண்டு. அவள் படித்த கதைகளால் மட்டுமல்ல, பலரின் வாழ்க்கை யதுபவங்களை நேரில் கண்டபின், 'குடும்பம் என்பது ஒரு குருக்ஷேத்திரம்' என்பதாகவே எண்ணி யிருந்தாள். அவளைப் பொறுத்தமட்டில் வாழ்க்கை மலர்ப் பூங்காவாக மணம் செறிந்து விளங்கியது. இருவரும் இந்த யுகத்துப் பேர் ஆதலால் வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் உற்ற துணையாக அமைந்தனர். அந்த நாளிலிருந்து குறையேதுமின்றி ஒருவரையொருவர் திருப்தி செய்வதையே நோக்கமாக, ...புக் கட்டளையாகக் கொண்டு வாழ்ந்தால் வாழ்வு கசந்தா போய்விடும்! எங்கோ ஒரு சின்னஞ்சிறு கிராமத்தில் பிறந்து வளர்ந்த ராதை, தன் மண வாழ்க்கை ஆயிரத்துக்கு மேற்பட்ட மைல்களைத் தாண்டி 'நாக்பூர்' நகரில் தொடங்கும் என்று பருவ வயதில் கனவு கூடக் கண்டதில்லை. ரகு மகா ரசிகன். ...ங்கிதமறிந்தவன். இலக்கிய நுகர்ச்சியில் ராதைக்கு ஒரு ஆசையை மட்டுமின்றி, வெறியையே உண்டு பண்ணியிருந்தான். முதல் தேதியன்று இருவருமாகக் கடைத்தெரு சென்று தேவையான சாமான்களை வாங்கி வருவர். கை நிறைய வாங்கும் சம்பளத்தைப் பலரைப்போல முதலிரண்டு வாரங்களிலேயே செலவழித்துவிட்டுப் பஞ்சாய்ப் பறக்கும் வழக்கம் ரகுவிடம் இல்லை. 'பணம் செலவழிப்பதும் ஒரு கலை!' என்று அடிக்கடி சொல்லுவான். ராதையின் ...களை அவளாக வெளியிடுமுன்பே ...து கொண்டு நிறைவேற்றும் தனிப் ...பை ரகு கற்றுக் கொண்டவன். தாய்ப்

பறவை குஞ்சை அரவணைப்பது போல், நீலக் கருவிழிகளை கண்ணிமைகள் காப்பதுபோல், ராதையைப் பேணி வந்தான் ரகு. நிலவு பிரியாத இரவுபோல நீடித்த வாழ்வு அவ்விருவரின் ஏக போக உரிமையா யிருந்தது.

வயிற்றில் வந்த ஆறு மாதத்தில் அவளை அமர்த்திவிட்டு, தானே வீட்டுவேலைகளைக் கவனித்துக் கொண்டான். இன்ப வெறியில் வேலைகளைச் செய்யும் ரகு நிமிஷத்தில், அவளைவிட விரைவில் வேலைகளை முடித்து விடுவான். சிற்சில சமயம் 'ரகு காட்டும் அன்புக்குத் தான் அருகதையா!' என்ற சம்சயம் கூட அவள் மனதில் எழுந்துவிடும்.

பிரசவத்திற்குப் பிறந்த வீட்டில் கொண்டுவந்து விட்டுப் போக அவனே நேரில் வந்திருந்தான். நடைமுறைக்கு மாறான அந்த நிகழ்ச்சியையும் அதன் பலாபலன்களையும் பற்றிக்கூடப் பலபேர் பலவிதத்திலும் அபிப்பிராயம் தெரிவித்தனர். பத்து நாட்களுக்குமேல் ரகுவால் தங்க முடியவில்லை. கிளம்புவதற்கு முதல் நாளிரவு வெகு நேரம் வரை இருவரும் பேசித் தீர்த்தனர். பிரியும் நேரம் நெருங்க நெருங்க ராதையின் கண்களில் நீர் திரைகட்டியது. பிரிவின் வெப்பம் தன்னைச் சுட்டுப் பொசுக்கப் போவதை அறிந்தும் ரகு தன் கலக்கத்தை வெளிக்காட்டாமல் ராதையைத் தேற்ற முயன்றான். பிரசவம் என்பது பெண்கள் செத்துப் பிழைக்கும் புனர் ஜென்மம். அதிலும் முதல் பிறப்பு. எனவே, ராதை பெற்றுப் பிழைக்க வேண்டுமே என்ற பெருங் கவலையில் ரகு நிம்மதி இழந்திருந்தான்.

ராதைகூடக் கேலியாகக் கேட்டாள். "உங்களுக்கு என்ன, நான் போய் விட்டால்கூடப் பெண் கொடுக்க ஆயிரம் பேர் காத்திருப்பார்கள். நீங்களும்......என்ன!......ஹூம்.......!" என்றாள். உண்மையாகவே அவளுக்குச் சிறிது கலக்கம் ஏற்பட்டிருந்தது. எங்கே, தான் பிழைத்து வாழப் போவதில்லையோ என்பதாக. ரகுவின் அன்புக்குப் பாத்திரமாவதற்காகவாவது தன்னை வாழ்விக்க வேண்டுமென்று அவள் வேண்டாத தெய்வங்கள் உலகத்தில் இல்லை.

ஆனால் விதியை என்னவென்று சொல்வது! ஒரு நாள் படுக்கையில் படுத்த ரகு, எல்லோரையும் சோகக் கடலிலாழ்த்தி விட்டுப் போய் விட்டான். கண்காணாத இடத்தில் நண்பர்களின் முன்னிலையில் அவன் பிணம் வெந்தது. முகமுழி பார்க்கக்கூட ராதை கொடுத்து வைக்கவில்லை.

மாளாத சோகத்தின் காரணத்தை யார் தலையில் சுமத்தலாம் என்று பார்த்திருந்த உறவு, ராதை வயிற்றில் சுமந்திருந்த பிண்டத்தைப் பிடித்தது. 'அப்பனை விழுங்கிய துடைகாலி' என்ற கடுஞ் சொற்களில் பச்சிளம் சிசுவை நிந்தனை செய்தனர். அமங்கல வாழ்க்கையில் அவள் தாய்மை மலர்ந்தது. அன்று, குழந்தையைப் பற்றி அவள் நெஞ்சில் ஊறிய விஷம் கறைபடிந்து விட்டது.

எந்தக் குழந்தைக்காக அவள் ஏங்கித் தவித்தாளோ, அதன்பேரிலேயே அளவு மீறிய வெறுப்பை வளர்த்துக்கொண்டு விட்டாள். எட்டாம் மாதத்திலிருந்து தாய்மையின் பரிவோடு அதைச் சுமக்கவில்லை. சுமைதாங்கிபோலக் கடனுக்காக, கடமைக்காக அதை வயிற்றில் ஏந்தியிருந்தாள். இத்தனை வெறுப்புக்கும் தன்னை ஆளாக்கிக் கொண்டு ஆணாகப் பிறந்தது அந்தக் குழந்தை. பிறந்த அன்று வீட்டில் மகிழ்ச்சியேதும் நிலவவில்லை. வீடே ஓய்ந்து கிடந்தது. சோகத்தின் சுவடு நீங்காதிருக்கையில் அதன் பிறப்பு, காயம்பட்ட இடத்திலேயே கல்லாலடிப்பதுபோல் இருந்தது. பாட்டியின் கொஞ்சுதலுக்கும், தாத்தாவின் பொக்கைவாய்ச் சிரிப்புக்கும், மாமாக்களின் செல்லத்திற்கும் அது பாத்தியமாகவில்லை. தெருக்குழந்தைகள் அதைச் சுற்றி வந்து கும்மாளமடிக்கவில்லை. அதற்கென்றே தைத்து வைத்திருந்த சட்டைகள், பனிக்குல்லாய்கள் இவையெல்லாம் புழுதிபடியப் பீரோவிலேயே கிடந்தன.

எடுப்பார் கைப்பிள்ளையாக அந்தக் குழந்தை ஒருமாதகாலம் வளர்ந்து விட்டது. அன்போடு கொஞ்சிக் குலவ யாரும் முன்வரவில்லை. இந்த நிலையில் இரண்டு நாட்களாக அதற்கு மாந்தம் வேறு. வீடு நிறைய உறவிருந்தும் குழந்தை அனாதையாகக் கிடந்து உதைத்துக் கொண்டது. அதன் அழுகுரலுக்குச் செவி சாய்க்க ஆளில்லை.

* * *

வீறிட்டு அழுத குழந்தை அழுகையை அடக்கிக்கொண்டு எப்பொழுதோ தூங்கி விட்டது.



எண்ண அலைகள் அடங்கவே, ராதை தொட்டிலை வெறித்துப் பார்த்தபடி ஏதேதோ, எழுத்திலடங்காத சுக - சோக நினைவுகளில் லயிக்க முற்பட்டாள்.

உரிமைக் குரலொன்று அவள் கவனத்தை இழுத்துப் பேசுவது போலிருந்தது.

"அம்மா! நான் வீறிட்டு அழுத பின்னும் நீ எனக்காக இரங்கவில்லை. உன் துயரம் உன் மனத்தைக் கல்லாக்கி யிருக்கலாம். ஒன்று மறியாத நானா அதற்குப் பொறுப்பாளி? வாழ்க்கையில் வரும் கஷ்டமும் துக்கமும் யாவருக்கும் பொது. அவை வந்து போவதை யாராலும் தவிர்க்க முடியாது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நிலையில், ஒவ்வொரு உருவத்தில் வரும். இன்பமாகச் சென்ற வரை, வாழ்க்கை உனக்கு ரசித்தது. உன் இன்பத்திற்குப் பங்கம் வந்தபொழுது வாழ்க்கை துயரமாகத் தோன்றுகிறது. இதற்கு உன் மனம்தான் காரணம். மனம் ஒரே நிலையில் நிலைத்து நின்று விட்டால் உலகம் இயங்க வழியே இல்லை. மனம் காற்றாடியாகச் சுழல வேண்டாமென்றாலும் திசைகாட்டிபோலக் காற்றடிக்கும் பக்கமாவது திரும்பவேண்டும். ஒருவரிடத்தில் அன்பு ஏற்

பட்டுவிட்டால் அதற்கு ஒரு நாள் பிரிவும் தொடரும் என்ற உண்மையை மறந்து விட்டாய். ஒன்று எதிலும் அன்பு கொள்ளாமலிருக்க வேண்டும்; அதிகப் பற்று வைக்காமலிருக்க வேண்டும். அல்லது பிரிவைத் தாங்கக் கூடிய மனோதிடமாவது பெற்றிருக்க வேண்டும். இத்தனை நாளுக்குப் பின்னும் உன்



ஏழை நெஞ்சு என் அப்பாவுக்காக ஏங்குகிறது. எத்தனைதான் அழுதாலும் அவர் திரும்பி வருவாரா! 'பிள்ளைக் கனியமுதை'ப் பெற்றிருக்க உலகத்தில் எத்தனையோ பேர்கள் தவங்கிடந்து வேண்டுகின்றனர். நீயோ உன் சுகம் அழிந்து விட்டதே யென்ற சுயநல உணர்ச்சிப் பெருக்கில் பெண் குலத்தின் தியாக மனப்பான்மையையும், தாயன்பையும் மறந்து விட்டாய். உன்னைத் 'தாய்' என்று சொல்ல எந்தக் குழந்தைக்கும் மனம் வராது. ஈன்ற தாய் வெறுத்தாலும் அவள் அருள் வேண்டி அழுதேன். என்னை நீ வெறுத்தாலும் உன் அணைப்புக்கு நான் ஏங்கித் தவிக்கிறேன். அம்மா! எங்கே, என்னை வந்து எடுத்துக் கொள்ள மாட்டாயா!''

குரல், மெல்ல மெல்லத் தேய்ந்து அடங்கியது. ராதையின் மனக் கண்கள் அவிந்து புறக் கண்களில் புது ஒளி மின்னியது. மனம் அழுக்கு நீங்கி வெளுத்தது. குழந்தை மனித குலத்தின் தந்தையல்லவா! ராதைக்குத் தினையளவு அனுதாபம் நெஞ்சத்தின் ஆழத்திலே சுரந்து விட்டது.

"பாவம்! அதுதான் என்ன செய்யும்! என் வினை என்னைச் சுட்டிருக்கலாம். பழியை அதன் தலையில் சுமத்தி விட்டதால் என் சோகம் தீர்ந்து போய் விட்டதா! தாய் பழித்தால் ஊர் பழிக்கும். குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்! இனி வாழ்க்கையெனும் முடியா நெடும் பாதையில் குவிந்து கிடக்கும் இருளைத் துடைக்கும் ஒளி விளக்காகச் சுடர்விட அவனைவிட எனக்கு யார் துணை வர முடியும்! 'அவர்' வைத்துப் போன க்ஷேம நிதியல்லவா, அவன்! குழந்தையைச் செய்யும் அலட்சியம் அவரைச் செய்ததாக அல்லவா ஆகும்! அவ்வளவுக்கு நன்றி மறந்த செய்கையை நான், ரகுவின் துணைவியான நான் செய்வதா!''

மனச்சாட்சி குடைந்து கேட்ட கேள்விகளும் ஆளவந்த அசரீரி போன்ற மூன் குரலும் ராதையை அயரச் செய்து விட்டன. மின் வேகத்தில் நினைவு வெள்ளம் புது நிலத்தில் பாய்ந்தது.

தொட்டிலருகே பாய்ந்து சென்றாள் ராதை. குழந்தையை வாரியெடுத்துத் தன்னிரு கைகளில் சிறை செய்து, மார்புடன் அணைத்து, கன்னக் கதுப்புகள் கன்னிச் சிவக்குமளவுக்கு முத்த மழை பொழிந்தாள். அவளுடைய அணைப்புக் கொள்ளையில் குழந்தை திணறிப் போயிற்று.

அணைப்பின் புது அனுபவம் பழைய மற்றொரு அணைப்பைக்கூட புறமுதுகிடச் செய்யும் மெய்யுணர்வில் அவளை அழுத்தியது. ராதையின் புறக் கண்கள் குழந்தையைக் கண்டன. அகக் கண்கள் பழைய நினைவுகளை எட்டிப் பார்த்தன. சுகத்தையும் துக்கத்தையும் சமமாகப் பாவிக்க ராதை கற்றுக்கொண்டு விட்டாள். அந்தக் கணத்திலே ராதையின் முகத்தில் 'தாய்மை' என்ற சொல்லின் பொருளும் தன்மையும் படிந்து களை வீசின.




மராத்திக் கதை: **லக்ஷ்மணராவ் சரதேசாய்** மொழிபெயர்ப்பு: **வாஞ்சி**

**உ**ண்மையான இந்தச் சம்பவம் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது.

நாராயணராவ் வீட்டை விட்டுப் புறப்படுமுன் தமது பூஜை அறைக்குள் சென்றார். தமது குல தெய்வத்தின் முன்னிலையில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்தார்.

அவர் மனைவி லக்ஷ்மி பாயும் அவரைப் பின் பற்றிக் குல தெய்வத்தை வணங்கினாள்.

இருவர் கண்களிலும் கண்ணீர் ததும்பியது.

"துர்க்கா தேவி! லோகமாதா! இந்தத் தடவை யாவது போகிற காரியம் ஜெயமாகும்படி செய்ய வேண்டும்; எங்கள் மானத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்று லக்ஷ்மிபாய் மனம் நொந்து பிரார்த்தனை செய்தாள்.

பிறகு பூஜை அறையில் ஒரு சிறு பெட்டியில் வைக்கப்பட்டிருந்த ரத்னப் பதக்கத்தை எடுத்து லக்ஷ்மிபாய் தன் கணவன் கையில் பய பக்தியுடன் கொடுத்தாள்.

அந்தப் பதக்கம் பல தலைமுறைகளாக நாரா யண ராவ் குடும்பத்தின் தெய்விகப் பொக்கிஷ மாக இருந்து வருகிறது.

நாராயண ராவின் தந்தை இறக்கும் தறுவாயில் அவரைக் கூப்பிட்டார். "நாராயணா! இந்தப் பதக்கம் வெகு காலமாக நம் குடும்பத்தின் அதிர்ஷ் டப் பொக்கிஷமாக இருந்து வருகிறது. இதுதான் நம் குடும்பத்தின் லக்ஷ்மி என்று நினைத்துக் கொள். எவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டாலும் இந் தப் பதக்கத்தைக் கை நழுவ விட்டு விடாதே. பெரிய காரியத்தை உத்தேசித்துப் போகும்போது, இந்தப் பதக்கத்தை ஒரு துணியில் முடிந்து இடுப் பில் வைத்துக் கொள்" என்று தமது புதல்வருக் குக் கட்டளை யிட்டார்.

தன் மூதாதையர்களில் எத்தனை பேருக்கு அந் தப் பதக்கத்தினால் எவ்வளவு நன்மை ஏற்பட் டிருக்குமோ! இதை எண்ணியபோது நாராயண ராவுக்கு மெய் சிலிர்த்தது.

நூற்றுக் கணக்கான ஆண்டுகளாகத் தன் குடும் பத்தினர் உபயோகித்ததால் அந்தப் பதக்கம் சிறிது தேய்ந்திருந்தாலும், அதன் பளபளப்பும் கற்களின் ஜொலிப்பும் அணுவளவும் குன்றவில்லை. நாராயணராவ் அதை ஒரு துணியில் முடிந்து இடுப்பில் கட்டிக் கொண்டார். அதன் மகிமை யால் இந்தத் தடவை அவர் போகும் காரியம் வெற்றிகரமாக முடியும் என்ற நிச்சயமான நம் பிக்கை அவருக்கு ஏற்பட்டது.

* * *

**த**ன் மனைவி லக்ஷ்மிபாயின் தூண்டுதலால்தான் நாராயணராவ் புருஷோத்தம பாபாவின் வீட்டுக் குப் புறப்படலானார். என்ன துணிச்சல்! தன் பெண்ணுக்குப் புருஷோத்தம பாபாவின் பிள்ளை யைக் கொடுக்கும்படி கேட்பதற்காகவே அவர் புறப்பட்டார்!

அன்று விடியற்காலம் லக்ஷ்மிபாய் தன் கண வரை எழுப்பி, தான் கண்ட ஆச்சரியமான கனவை அவரிடம் சொன்னாள். "'புருஷோத்தம பாபாவின் வீட்டுக்குப் போ. உன் பெண்ணுக்கு

வரன் கிடைக்கும்' என்று துர்க்கா தேவி என் கனவில் வந்து சொன்னாள்'' என்றாள் லக்ஷ்மிபாய்.

அவ்வித மிராவிடில் நாராயணராவ் புருஷோத்தம பாபாவின் வீட்டுக்குப் புறப்பட்டிருக்கவே மாட்டார். ஆம், செல்வத்தில் புரளும் பாபாவின் மகனுக்கும் மிகவும் ஏழையான நாராயண ராவின் மகளுக்கும் எவ்வளவு தூரம்!

தன் பெண் துளசிக்கு வரன் தேடுவதற்காகச் சென்ற இரண்டு மூன்று வருஷங்களாய் நாராயண ராவ் படும் கஷ்டத்தைச் சொல்லி முடியாது. அவர் ஏழை என்ற ஒரே காரணத்துக்காக பல நல்ல வரன்களும் தட்டிப் போய்விட்டன. அப்படியிருக்க லட்சக்கணக்கில் சொத்தும் மிகுந்த செல்வாக்கும் உள்ள புருஷோத்தம பாபாவின் வீட்டுக்கு நாராயணராவ் புறப்பட்டதற்குக் காரணம் லக்ஷ்மிபாயின் கனவில் அவர் கொண்ட உறுதியான நம்பிக்கைதான்! தவிர, புருஷோத்தம பாபாவின் நல்ல குணமும் நாராயணராவுக்குச் சிறிது நம்பிக்கையைக் கொடுத்தது.

பரம்பரையாகச் சீரும் செல்வமுமாக இருந்த குடும்பம் நாராயண ராவின் காலத்தில் நொடித்து விட்டது. தர்ம காரியங்களுக்கும் ஏழைகளுக்கும் அள்ளி அள்ளிக் கொடுத்ததே குடும்பச் சொத்துக்கள் கரைந்ததற்குக் காரணம். அவர்கள் ஒரு காலத்தில் மிகுந்த செல்வந்தர்களாக இருந்தனர் என்பதற்கு அடையாளமாக அரண்மனை போன்ற ஒரு வீடு மாத்திரம்தான் பாக்கியிருந்தது.

பசியுடன் அவர்களுடைய வீட்டுக்கு யார் வந்தாலும் வெறும் வயிறாகத் திரும்புவதில்லை. இதை அந்தப் பக்கத்தில் யாவரும் அறிவார்கள். பசியுடன் வருவோருக்கு நாராயணராவ் குடும்பத்தின் நிலைமை தெரியுமா! தினந்தோறும் யாராவது சாப்பாட்டுக்கு வராமல் இருப்பதில்லை. இதனால் ஏற்கனவே கஷ்ட தசையி லிருந்த அவரது குடும்பத்தின் துன்பம் இன்னும் அதிகமாகியது.

பன்னிரண்டு வயதான துளசி நல்ல அழகும் குணமும் வாய்ந்த பெண்ணாக இருந்தும் கூட, கல்யாண வயது வந்த பிள்ளைகளின் பெற்றோர்கள் 'பெருங்காயம் வைத்திருந்த பாத்திரத்தினால் என்ன பலன்!' என்று சொல்லி விட்டார்கள். அவர்கள் சொத்தையும் செல்வத்தையும் தான் பிரதானமாகக் கருதினார்கள்; துளசியின் அழகையோ, நாராயணராவ் குடும்பத்தின் கௌரவத்தையோ முக்கியமாகக் கருதவில்லை!

இன்னும் ஒன்றிரண்டு வருஷம் சென்றுவிட்டால் துளசி கன்னிப் பருவத்தைக் கடந்து விடுவாள். அவர்களுடைய குடும்ப வழக்கத்தை அனுசரித்து அதற்குள் துளசிக்கு விவாகம் செய்து தீரவேண்டும். இல்லாவிட்டால் குடும்பத்தின் கௌரவத்துக்கும் நல்ல பெயருக்கும் ஹானி ஏற்பட்டுவிடும். ஊரார் யாவரும் ஏளனம் செய்வார்கள். ஏற்கெனவே ஏழை என்ற காரணத்தினால் நாராயண ராவை அலட்சியம் செய்வோர் மேற்கொண்டு அவரை அதிகமாக அவமதிக்க ஆரம்பித்து விடுவார்கள்.



நாராயண ராவ் புறப்படும்போது துளசி வாயிற் படியில் வந்து நின்றாள். "கண்ணே! இனிமேல் என்னையும் உன் அம்மாவையும் விட்டு விட்டு நீ கணவன் வீட்டுக்கு ஓடிவிடுவாய்!" என்றார் நாராயண ராவ் விளையாட்டாக. வாடியிருந்த அந்தக் குழந்தையின் முகம் அவர் மனதை வேதனைக்கு உள்ளாக்கியது. எனினும் அதை அவர் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. அதற்கு மாறாகத் துளசியை உற்சாகப் படுத்துவதற்காகவே அவர் அவ்விதம் கூறினார்.

நாராயண ராவ் நடந்து சென்றதைப் பார்த்த போது லக்ஷ்மிபாயின் கண்களில் நீர் துளிர்த்தது. அவள் மாமனார் காலத்தில் வண்டிகள் என்ன, வேலைக்காரர்கள் என்ன, எல்லாம் பிரமாதமாக இருக்கும். அவர் நடந்து அறியார். ஆனால், இன்றோ நாராயண ராவ் வாடிய முகத்துடன், சோர்ந்த உள்ளத்துடன் கால்நடையாகச் செல்லுவதைப் பார்த்தபோது லக்ஷ்மிபாயின் உள்ளம் துடித்தது.

* * *

நாராயண ராவ் புருஷோத்தம பாபாவின் மாளிகைக்குச் சென்றபோது, பாபா அங்கு இல்லை. அவர் மங்கேஷ் ஆலயத்தில் ஸ்வாமி தரிசனம் செய்வதற்காக யாத்திரை சென்றிருந்தார். இரண்டு நாட்கள் கழித்துத்தான் வருவார் என்பதும் ராவுக்குத் தெரிந்தது.

பாபாவின் மூத்த புதல்வன் எஸ்டேட் காரியமாக வெளியூருக்குச் சென்றிருந்தான். பாபாவின் இளைய புதல்வனும் கல்யாணமாகாதவனுமான விஷ்ணுவும் தன் தந்தையுடன் சென்றிருந்தான்.

எனினும் வீட்டிலிருந்த மற்றவர்கள் பாபா வரும் வரையில் தங்கியிருந்து அவரைப் பார்த்து விட்டுச் செல்லலாம் என்று கூறினார்கள்.

ராவ் ஏழையாகி விட்டார் என்பதைக் கவனியாமல் அவருக்கு மரியாதையுடன் உபசாரம் செய்தார்கள். அதைக் கண்டதும், தம்முடைய உண்மையான ஏழ்மை நிலைமை அவர்களுக்குத் தெரியாதோ என்று ராவ் எண்ணினார்.

பாபாவைப் பார்க்காமல் திரும்பி ஊருக்குச் செல்லவும் அவருக்கு மனமில்லை. தம்முடைய எதிர்கால வாழ்வோ அல்லது தாழ்வோ பாபாவின் பதிலையே பொறுத் திருக்கிறது என்று அவருக்குத் தோன்றியது.

மத்தியானம் சாப்பிட்டபின் ராவ் வாயிற்புறத்தில் உள்ள பெரிய ஹாலின் ஒரு பக்கத்தில் படுத்திருந்தார். அங்கு பாபாவின் பேரக் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். இயற்கையாகவே குழந்தைகளிடம் மிகுந்த வாத்சல்யம் உள்ள ராவ் அவர்கள் குதூகலமாக விளையாடிக் கொண்டிருப்பதைக் கவனித்துக்கொண்டிருந்தார்.

அப்போது பாபாவின் ஏழு வயதுள்ள பேரன் ஒருவன் திடீரென்று அலறினான். அவன் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்த சங்கிலியும் அதில் இருந்த

விலையுயர்ந்த ரத்னப் பதக்கமும் காணாமற் போய் விட்டதே அவனது கூக்குரலுக்குக் காரணம்.

சிறிது நேரத்தில் அங்கு ஒரே பரபரப்பும் குழப்பமும் ஏற்பட்டு விட்டன. பாபாவின் குமாஸ்தாக்களும் வேலைக்காரர்களும் அங்கு வந்து தேடினார்கள். அவர்கள் அடிக்கடி தன்னைச் சந்தேகத்துடன் பார்ப்பதாக நாராயணராவுக்குத் தோன்றியது. குழந்தைகள் விளையாடியபோது ராவைத் தவிர வேறு யாரும் அங்கு இல்லை அல்லவா!

ஏற்கெனவே ஏழ்மையினாலும் கஷ்டத்தினாலும் கவலையினாலும் மனம் நொந்து போயிருந்த ராவுக்கு, மேற்படி சம்பவம் இடி இடித்தது போல் இருந்தது. அவரது மனம் பட படவென்று அடித்துக் கொண்டது. கை கால்கள் நடுங்கின. இரண்டொரு வேலைக்காரர்கள் ராவைப் பார்த்து விட்டு மெதுவாக ஏதோ பேசிக் கொண்டது ராவின் மனோ வேதனையை மேலும் நூறு மடங்கு அதிகப் படுத்தியது.

செல்வத்தைக் காட்டிலும், உயிரைக் காட்டிலும் மானத்தையும் குடும்ப கௌரவத்தையுமே பெரிதாகக் கருதும் ராவ் குடும்பத்தின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுவதா! தமது குடும்பத்துக்கு இதற்குமுன் ஏற்பட்ட சோதனைகள் போதாதென்று, இத்தகைய பயங்கரமான சோதனையும் ஏற்பட வேண்டுமா!

துணிகரமாக ஒரு காரியம் செய்தாலன்றி, அந்தச் சோதனையிலிருந்து தப்ப முடியாது என்று ராவுக்குத் தோன்றியது.

இடுப்பில் உள்ள ரத்னப் பதக்கத்தை இழந்தாலன்றி மேற்படி சோதனையிலிருந்து மீள முடியாது என்பது நிச்சயம். அவ்வாறு செய்வதில் தாமதம் செய்தால் எல்லாம் அதோகதியாகி



நண்பன்:—நான் சித்திரக் காட்சிக்குச் சென்றிருந்தேன். அங்கே உன் படம் ஒன்றுதான் ரஸிக்கும்படியாயிருந்தது! ஏனென்றால்......!

சித்திரக்காரர்:— அப்படியா? ரொம்ப சந்தோஷம்! அவ்வளவு நன்றாயிருந்ததா?

நண்பன்:-ஏனென்றால், ஜனங்கள் மற்றச் சித்திரங்களைச் சுற்றி மொய்த்துக் கொண்டிருந்தனர்!

விடும். ஏனெனில் பாபாவின் ஆட்கள் தம்மைச் சோதிக்க முற்பட்டால்...! அத்தகைய நிலைமையைக் கற்பனை செய்து பார்த்தபோது ராவின் உடலும் உள்ளமும் நடுங்கின.

எனினும் அதே சமயம் அவரது தந்தையின் உருவம் அவருடைய மனக் கண்முன் வந்து நின்றது. "என்ன கஷ்டம் நேர்ந்தாலும் இந்தப் பதக்கத்தைக் கைதவற விடாதே" என்று மரணப் படுக்கையில் இருந்த ராவின் தந்தை கட்டளையிட்டுச் சென்றார் அல்லவா!

ஆனால் இப்போது என்ன செய்வது! தந்தையின் அத்தகைய கட்டளையை மீறியாவது, குடும்பத்தின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டும். இல்லாவிடில் தந்தை, பாட்டன் முதலிய மூதாதையர்களின் நற்பெயருக்கு அல்லவா களங்கம் ஏற்பட்டுவிடும்! நாராயண ராவின் குடும்பத்துக்கு திருட்டுப் பட்டம் ஏற்பட்டு விட்டால்... இதை எண்ணியபோது ராவுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது.

ராவ், அவ்வாறு களங்கம் ஏற்படுவதை எப்பாடு பட்டாவது தடுக்கவேண்டும் என்று தீர்மானித்தார். இடுப்பில் கட்டிக் கொண்டிருந்த ரத்னப் பதக்கத்தை ஒருவருக்கும் தெரியாமல் அவிழ்த்து அந்த ஹாலின் ஒரு மூலையில் கொண்டு போய் போட்டு விட்டார். அவ்விதம் போடும் போது யாராவது அதைக் கவனித்து விட்டார்களோ என்ற பீதியும் அவரை வாட்டியது.

அவ்வாறு போட்ட பிறகுதான் அவர் மனம் நிம்மதியடைந்தது. தம்மை அழுத்திக் கொண்டிருந்த ஒரு பெரும் பாரம் நீங்கியது போல் தோன்றியது. இனி யார் வேண்டுமாயினும் எது வேண்டுமாயினும் பேசிக் கொள்ளட்டும். அவ்வாறு பேசிக் கொள்வதை அவரால் தடுக்க முடியுமா! எனினும் இனி அவரைச் சோதனை செய்து பார்த்தால், அவரிடம் ரத்னப் பதக்கம் இராது என்பது மாத்திரம் நிச்சயம்!

பதக்கத்தைக் கீழே போட்ட பின் நாராயண ராவ் அந்த வீட்டில் அதிக நேரம் தங்கவில்லை. அவரது மனச்சாட்சி களங்க மற்றதெனினும், அவரால் யாரையும் நிமிர்ந்து பார்த்துப் பேச முடியவில்லை. ஒவ்வொருவரும் தம்மைக் குற்றவாளி என்று நினைப்பது போல் அவர் மனதுக்குத் தோன்றியது.

எனவே, அந்த நிலைமையில் அவர் புருஷோத்தம பாபா வரும் வரையில் காத்திருக்க விரும்பவில்லை. முக்கியஸ்தர்களான இரண்டொருவரிடம் மாத்திரம் அரைக் குறையாக விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டுச் சென்று விட்டார்.

* * *

இரண்டு நாள் கழித்து பாபா திரும்பி வந்து சேர்ந்தார். வீட்டில் உள்ளவர்கள் ரத்னப் பதக்கம் காணமற் போனதையும் பிறகு அது ஹாலில் ஓர் ஓரத்தில் கிடந்து அகப்பட்டதையும் சொன்னார்கள். பாபா வரும்வரையில் தங்கியிருந்து அவரைப் பார்த்துவிட்டுச் சொல்லுவதாகக் கூறியிருந்த நாராயண ராவ், திடீரென்று புறப்பட்டுச் சென்ற மர்மத்தையும் குறும்பர்களான இரண்டொரு குமாஸ்தாக்கள் பாபாவின் காதில் போடத் தவறவில்லை.

ஆனால், பணத்தைக் கொண்டு மனிதனின் பெருமையை அளவிடும் வழக்கம் பாபாவிடம் கிடையாது. தவிர, நாராயண ராவின் குடும்ப நிலையைப் பற்றிய விவரங்கள் பாபாவின் செவிக்கு எட்டியிருந்தன. ராவின் தந்தை காலத்தில் கூட

அந்தக் குடும்பம் எவ்வளவு அந்தஸ்துடன் வாழ்ந்து வந்தது என்பதையும் அவர் அறிவார்.

ராவ் உண்மையிலேயே ரத்னப் பதக்கத்தை எடுத்திருந்தால் கூட அவரை மன்னித்துவிடக் கூடிய அவ்வளவு உயர்ந்த குணம் புருஷோத்தம பாபாவுக்கு உண்டு.

எனவே, குமாஸ்தாக்கள் குறும்புத்தனமாகக் கூறியதை அவர் பொருட்படுத்தவில்லை. 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா !' என்றது பொன் போன்ற அவரது மனம்.



அவ்வமயம் ராவைப் போல் பாபாவின் மனமும் கவலையில் ஆழ்ந்திருந்தது. வறுமை காரணமாக ராவின் பெண்ணை விவாகம் செய்து கொள்ள யாரும் முன் வரவில்லை. அது போலவே மிகுந்த செல்வவந்தரான பாபாவின் பிள்ளைக்குப் பெண்ணைக் கொடுக்கும் தகுதி தங்களுக்கு இல்லை என்று அஞ்சிப் பல சீமான்களும் ஒதுங்கி விட்டனர் ! பெண்ணைக் கொடுக்க முன் வந்த சில பெரும் செல்வம் படைத்த குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள் பாபாவின் மனதுக்குத் திருப்திகரமாக இல்லை.

பலர் லக்ஷக் கணக்கில் பாபாவின் காலடியில் கொட்டிவிட்டு அவரது புதல்வருக்குத் தங்களுடைய அருமைப் பெண்ணை விவாகம் செய்து கொடுப்பதற்குத் தயாராக இருந்தார்கள். ஆனால் பாபா பணத்தைக் கண்டு மயங்குபவர் அல்ல. தவிர, ராஜாதி ராஜாக்களைப் போல் வற்றாத செல்வத்தில் புரண்டு கொண்டிருந்த பாபாவுக்கு மேற்கொண்டு பணம் எதற்கு !

தமது மருமகளாக வரும் பெண் குணவதியாகவும் குல தீபமாகவும் விளங்க வேண்டும் என்பதே பாபாவின் ஆர்வம்.

இவ்வளவு உயர்ந்த குணம் வாய்ந்த பாபா, தம்மைப் பார்க்க வந்த ராவ் திடீரென்று புறப்பட்டுச் சென்று விட்டார் என்பதைக் கேட்டதும் மிகவும் வருந்தினார். ஏழைகளை அவமதிப்பதைக் காட்டிலும் கொடிய பாவம் வேறு ஒன்றும் இல்லை என்பது பாபாவின் அபிப்பிராயம்.

எனவே, உடனே நாராயண ராவுக்கு ஒரு கடிதம் எழுதினார். மறுபடியும் ஒரு தடவை தமது வீட்டுக்கு விஜயம் செய்து விட்டுப் போக வேண்டும் என்று அவரை அந்தக் கடிதத்தில் அன்புடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

கடிதத்தில் உள்ள மை காய்வதற்காக பாபா ஹாலுக்கு வெளியே புஷ்பச் செடி வைத்திருக்கும் சட்டியிலிருந்து கொஞ்சம் மணலை எடுத்த போது, மணலுடன் கையில் ஒரு பதக்கமும் வந்ததைக் கண்டதும் திடுக்கிட்டுப் போனார்.

ஹாலிலிருந்து ரத்னப் பதக்கம் கிடைத்து விட்டதாகச் சொன்னார்களே, அப்படியானால் இந்த ரத்னப் பதக்கம் எங்கிருந்து வந்தது!

உடனே பாபா தன் வேலைக்காரர்களையும் குமாஸ்தாக்களையும் கூப்பிட்டு மேற்படி ரத்னப் பதக்கத்தைக் காட்டவே, அவர்கள் அசடு வழியத் தலை குனிந்து நின்றனர்.

அவர்கள் எல்லோரும் நாராயண ராவே குற்றவாளி என்று முடிவு செய்து விட்டார்கள். பாபாவினுடைய பேரனின் ரத்னப் பதக்கத்தை ராவ் திருடி விட்டதாகவும், பிறகு தங்களுக்குப் பயந்து பதக்கத்தை ஹாலில் போட்டு விட்டு ஊருக்குத் திரும்பி விட்டதாகவும் அவர்கள் கேலி செய்து கொண்டிருந்தார்கள். எனவே குழந்தையின் பதக்கம் புஷ்பச் செடியிருந்த சட்டியிலிருந்து கிடைத்ததைப் பார்த்ததும்தான் அவர்கள் தாங்கள் பெரும் தவறு செய்து விட்டதை உணர்ந்தார்கள்.

ஹாலில் கிடந்த பதக்கம் எங்கிருந்து வந்தது என்பதை அறிந்து கொள்ள பாபாவுக்கு அதிக நேரம் ஆகவில்லை. ஏனெனில் தங்கள் குடும்பத்தில் உள்ள பதக்கத்தைப்போலவே ராவ் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக ஒரு பதக்கம் இருக்கிறது என்ற இரகசியம் புருஷோத்தம பாபா ஒருவருக்குத்தான் தெரியும் !

பாபாவுக்கு ஒரு புறம் ஆனந்தம் ஏற்பட்டது ; மற்றொரு புறம் துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டது. தம்மிடம் ஏதோ உதவியை நாடி ராவ் வந்திருக்க வேண்டும் ; வந்த இடத்தில் குழந்தையின் பதக்கம் காணமற் போனதும் திடுக்கிட்டுப் போய், தமக்கும் தம் குடும்பத்துக்கும் கெட்ட பெயர் ஏற்படாமல் இருப்பதற்காக ராவ் விலைமதிப்பில்லாத பொக்கிஷமான தமது குடும்பப் பதக்கத்தைப் போட்டு விட்டுப் போயிருக்க வேண்டும் என்பது பாபாவுக்குத் தெரிந்து விட்டது. அதன் பயனாக, ராவ் மீதும் அவரது குடும்பத்தின் மீதும் பாபாவுக்கு இருந்த மதிப்பு பன்மடங்காயிற்று.

அவ்வளவுதான்! பாபா தாம் எழுதிய கடிதத்தை ராவுக்கு அனுப்பவில்லை. தாமே நேரில் அவர் வீட்டுக்குச் சென்று, மன்னிப்புக் கேட்டுக் கொள்வது என்று முடிவு செய்தார் !

உடனே பாபா தமது பல்லக்கைக் கொண்டு வரும்படி ஆட்களுக்குக் கட்டளை யிட்டார். தமது பெட்டியிலிருந்து மிகவும் விலையுயர்ந்த ஒரு ரத்ன ஹாரத்தையும் மற்றும் சில உயர்ந்த நகைகளையும் எடுத்துக்கொண்டு ராவின் ஊருக்குப் புறப்பட்டார்.

* * *

தன்னுடைய வீட்டு வாசலில் புருஷோத்தம பாபாவின் பல்லக்கு வந்து நின்றதைப் பார்த்ததும் ராவுக்கு இந்த உலகமே சுழல்வதுபோல் இருந்தது. தான் பாபாவின் வீட்டில் இருந்தபோது, இன்னும் என்ன தவறு நேர்ந்து விட்டதோ என்று எண்ணி அவர் மேலும் கதிகலங்கினார்.

பாபா பல்லக்கிலிருந்து கீழே இறங்கியதும் நடுக்கத்துடன் வாயிலில் நின்று கொண்டிருந்த ராவை அன்புடன் ஆலிங்கனம் செய்து கொண்டார்.

பாபாவை வீட்டுக்குள் அழைத்துச் சென்ற ராவ் அவர் உட்காருவதற்காக ஒரு கம்பளத்தை விரித்தார். நாலாபுறமும் கிழிந்திருந்த அந்தக் கம்பளம் ராவின் வறுமையை உலகத்துக்குப் பிரகடனம் செய்வதுபோல் இருந்தது! அதைக் கண்டதும் பாபாவின் மனம் நெகிழ்ந்தது.

அவர் உடனே ராவின் இரு கைகளையும் அன்புடன் பிடித்துக் கொண்டார். பாபா தன்னிடம் காட்டிய அன்பினால் உள்ளம் உருகிய ராவ் பாபாவின் முன்னிலையிலேயே குழந்தையைப்போல் தேம்பித் தேம்பி அழலானார்.

செல்வத்தில் மாத்திரமல்ல, உதார குணத்திலும் பெரியவரான பாபாவின் கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்தது.

அறையிலிருந்து இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு நின்ற லக்ஷ்மிபாய்க்கும் துளசிக்கும் தாங்கள் காண்பது உண்மையா அல்லது கனவா என்பதே தெரியவில்லை. பாபுவும் ராவும் சில விநாடி நேரம் மௌனமாக இருந்தனர்.

தாம் விட்ட கண்ணீருடன் தம்மைப் பிடித்து வந்த வறுமையும் தம்மை விட்டு விட்டு ஓடி விட்டதுபோல் ராவுக்குத் தோன்றியது!

பாபா இதற்கு முன் நொடிந்த எத்தனையோ குடும்பங்களைக் கைதூக்கி விட்டவர். மிகுந்த நற்குணமும் கௌரவ புத்தியும் வாய்ந்த ராவ் வறுமையால் வாடுவதைப் பார்க்க பாபாவினால் சகிக்க முடியவில்லை.

பாபா தாம் கொண்டு வந்திருந்த விலையுயர்ந்த நகைகளை எடுத்துக் கம்பளத்தில் வைத்தார்.

"ராவ்! உங்களுக்கு ஒரு பெண் உண்டு அல்லவா! அவளைக் கூப்பிடுங்கள்" என்றார்.

உடனே துளசி மிகவும் அடக்க ஒடுக்கமாக பாபாவின் எதிரில் வந்து நின்றாள்.

பாபா ஒரு க்ஷண நேரம் துளசியைக் கண்கொட்டாமல் பார்த்தார். தம் குமாரனுக்காகத் தேடிக் கொண்டிருந்த குல தீபமே தமது எதிரில் வந்து நிற்பதுபோல் பாபாவுக்குத் தோன்றியது! உடனே ஒரு முடிவுக்கு வந்தார். "குழந்தாய்! இந்த நகைகளை யெல்லாம் போட்டுக் கொண்டு எல்லாருக்கும் நமஸ்காரம் செய்" என்றார்.

பிறகு ராவ் பக்கம் திரும்பி, "தங்கள் குடும்பத்தின் பொக்கிஷம் இதோ தங்களிடமே திரும்பி வந்திருக்கிறது. எடுத்துப் பூஜை அறையில் வைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்.

அப்போது ராவுக்கு ஏற்பட்ட ஆனந்தத்தில் அவர் தாம் இது வரையில் பட்ட கஷ்டங்களை யெல்லாம் மறந்தார். நன்றி உணர்ச்சி பொங்க, பாபாவைப் பார்த்தார்.

நகைகளைப் போட்டுக் கொண்ட துளசி பாபாவை நமஸ்காரம் செய்துவிட்டு, தன் தந்தை தாயையும் நமஸ்காரம் செய்தாள்.

"ராவ், உங்களுடைய குடும்ப லக்ஷ்மியை உங்களிடம் கொண்டு வந்து சேர்த்தேன் அல்லவா! அது போலவே எங்கள் குடும்ப லக்ஷ்மியான உங்கள் பெண் துளசியை எங்கள் வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்! ஊருக்குச் சென்றதும் முகூர்த்த நாளைக் குறிப்பிட்டுக் கடிதம் அனுப்புகிறேன்" என்றார் பாபா.

இதைக் கேட்டதும் ராவுக்கும் லக்ஷ்மி பாய்க்கும் தாங்கள் வானவீதியில், மேகமண்டலத்தில் ஆனந்தமாகப் பறந்து செல்வது போல் தோன்றியது!

# அவர் பதில்!

பாலுவை அவன் தகப்பனார் அன்றுதான் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டுச் சென்றார். அவர் சிறிது தூரம் போவதற்குள்ளாகவே பாலு திக்குத் தெரியாத காட்டில் திசை தெரியாமல் தவிக்கும் பாலகனைப் போல ஓவென்று கதறி அழத் தொடங்கி விட்டான். அந்த வகுப்பிலுள்ள வாத்தியார் அவனருகில் வந்து, "அம்பி! அழாதே! நீ சமர்த்தோல்லியோ? அழக்கூடாது!" என்று சமாதானப் படுத்தினார்.



வாத்தியார் சமாதானப் படுத்தப் படுத்த அவன் அழுகை இன்னும் உச்ச நிலையை அடைந்தது. ஆனாலும் அவர் விடாமல், "பார்! உன்னைப்போல் எத்தனை பேர் இங்கேயிருக்கிறார்கள்? அவர்களெல்லோரும் அழுகிறார்களா? அவர்களைப்போல் நீயும் சமர்த்தாக அழாமல் படி. உனக்கு உன் அப்பாவை விட்டு வேண்டியதெல்லாம் வாங்கித் தரச் சொல்லுகிறேன்" என்று மேலும் ஆறுதல் கூறினார். ஆனால் அதையெல்லாம் அவன் சிறிதாவது காதில் வாங்கிக் கொண்டால் தானே?

அரை மணி நேரத்துக்குமேல் அவனைச் சமாதானப் படுத்தியும் பயனற்றுப் போகவே, அவர் பொறுமை யிழந்து கடுங் கோபத்துடன், "எதற்காக இப்படி விசித்து விசித்து அழுகிறாய்?" என்று கேட்டார்.

பாலு அவரது கோபத்தைக் கண்டு பயந்து போய், "பதினாறு வயசு ஆகும்வரை நான் இந்தப் பள்ளிக்கூடத்திலேயே இருக்க வேணும் என்று என் அக்கா சொன்னாள். அதனால் தான்..." என்றான்.

அதைக் கேட்ட வாத்தியார், "இதற்காக அழுவார்களோ? நீ பதினாறு வருஷங்கள்தான் இந்தப் பள்ளிக்கூடத்தில் இருக்க வேண்டும். நான் அறுபத்தைந்து வயசு வரையில் அல்லவா இப்பள்ளிக்கூடத்திலேயே இருக்க வேண்டும்?" என்றார். அதைக் கேட்டதும் பாலு அழுகையை நிறுத்திவிட்டு வியப்புடன் அவரை நோக்கினான். பாலுவைச் சமாதானப் படுத்தும் முயற்சியில் வெற்றி கண்ட உபாத்தியாயரின் முகத்தில் பரம சந்தோஷம் நிலவியது.

— பீ. எஸ்.

# வட்ட மேஜை

## ஒரு நல்ல படம்

24—2—52 கல்கி இதழில் எழுதியிருந்த "மனிதன் எப்படி உயர்கிறான்" என்ற சினிமா சம்பந்தமான கட்டுரையைப் படித்தேன். அதைப் படித்தவர்கள் எல்லோரும் தமிழில் நல்ல படம் ஒன்று கூட வெளி வரவில்லை என்று நினைப்பார்கள். இந்திய ஸ்திரீயின் குண விசேஷங்களை எடுத்துக் காட்டக்கூடிய நல்லபடம் ஒன்று இருக்கிறது.

சமீபத்தில் வெளியான "அன்னை" என்னும் தமிழ்ப் படத்தைத்தான் குறிப்பிடுகிறேன். இந்தப் படத்தைப் பட்டணத்தில் உள்ள எல்லா ஜனங்களும் முக்கியமாக சிறுவர், சிறுமியர்கள் பல முறை கண்டு களித்து விட்டதனால் கதையை இங்கு எழுதவேண்டிய அவசியம் இல்லை.

யசோதம்மா என்கிற ஸ்திரீ தன் மைத்துனன் கோபுவைச் சிறு குழந்தையிலிருந்தே வளர்க்கிறாள். அவன் குறும்புத் தனங்களை எல்லாம் பொறுத்துக் கொண்டு அவனை நல்ல வழியில் திருப்புகிறாள். ஆனால் கோபுவின் பெயரைக் கேட்டாலே ஊரில் உள்ள ஜமீன்தார் கூட நடுங்குகிறார்!

கோபுவின் விஷமத்தனத்தைச் செய்யும் சாமர்த்தியத்தினால் யசோதம்மாவுக்கும் அவள் கணவனுக்கும் பல கஷ்டங்கள் உண்டாகின்றன. கடைசியில் யசோதம்மாவின் நல்லுபதேசம், அவளுடைய சளியாத முயற்சி, வெற்றியடைகிறது.

துஷ்ட கோபு தன் அண்ணியின் அன்பான நல் உபதேசத்தின் பயனாக "தேசபக்தர் சர்தார் கோபால"னாக மாறி விடுகிறார்.

படத்தில் ஒருவிதமான ஆபாசக் காட்சிகளும் இல்லை. பாட்டு டப்பா சங்கீதம் போல் இருக்கிற குறையைத் தவிர வேறு ஒரு விதமான குறையும் இல்லை. நடிகர்கள் மிகவும் இயற்கையாக நடித்திருக்கிறார்கள். இம்மாதிரிப் படங்களை சர்வதேசிய பிலிம் திருவிழாவுக்குச் சிபாரிசு செய்யாமல் பாதாள பைரவியைச் சிபாரிசு செய்தவர்களை என்னவென்று சொல்லுவது!

இந்தப் படத்தில் ஜொலிக்கும் நக்ஷத்திரங்கள் என்று பெயர்பெற்ற நடிகர்கள் நடிக்கவில்லை. அப்படி இருந்தும் ஏன் ஏராளமான மக்கள் கண்டு களித்தனர்! இதிலிருந்து மக்கள் ஆபாசப் படங்களை விரும்பவில்லை என்பதுடன் நல்ல படங்களை விரும்புகின்றனர் என்பதும் வெளியாகிறதல்லவா!

தியாகராயநகரம்
25—2—52
எம். நாகசுப்ரமணியம்

★

## ஹிந்திப் படமா?

"மனிதன் எப்படி உயர்கிறான்!" என்னும் தலையங்கத்தில் உள்ளது உள்ளபடி தாங்கள் நம் இந்தியப் படங்களை விமரிசனம் செய்திருக்கிறீர்கள். இப்படங்களை அந்நிய நாட்டான் முன்பு எப்படி நமது சர்க்கார் திரையிடச் சம்மதித்தது என்பதே ஒரு அதிசயிக்கத் தக்க விஷயம். ஆனால் தாங்கள் ஒரு தலைப் பட்சமாகத் தமிழ் தெலுங்குப் படங்களுக்கு மட்டும் சவுக்கடி கொடுத்து நிறுத்தி விட்டீர்கள். நாமாவது பட உலகில் சிறிது பிற்போக்கு நிலைமையில் இருக்கிறோம் என்ற பெயரை வாங்கியவர்கள். ஆனால் ஹாலிவுட் படங்களைத் தோற்கடித்து விடுகிறோம் என்று பெருமையடித்துக் கொள்கிறார்களே, வட இந்தியப் பட முதலாளிகள், அவர்கள் படமாவது நமது கௌரவத்தை நிலை நாட்டிற்று! இல்லை, இல்லவே இல்லை. தாங்கள் 'அவாரா' என்னும் படத்தை விமர்சனம் செய்யத் தவறி விட்டீர்கள். ஜனங்கள் இதைப் பார்க்கத் தியேட்டர்களை முற்றுகையிடுகிறார்கள். பத்திரிகைகளின் விமரிசனமோ அபாரம்; படத்தைப் பற்றிப் பத்தி பத்தியாக எழுதித் தள்ளுகின்றன.

ஆனால் இப் படத்தைச் சர்வதேச கலைவிழாவில் காட்டியிருந்தால் நாம் தலை குனிய வேண்டியதே. மேற்கத்திய பாணியில் மேஜை மேல் சாப்பாடும், பிறந்த நாள் கொண்டாட்டமும் நிறைந்த படத்தை நாம் நம் விருந்தினர்களுக்குக் காட்டி நம்மைக் குறைத்துக் கொண்டிருக்க வேண்டாம். கதாநாயகியாக நடிக்கும் நர்கிஸ் ஓர் இடத்தில் மேற்கத்திய உடையில் அசல் வெள்ளைக்காரியாக காட்சி அளிக்கிறார். கதையில் வரும் பிரதம நடிகர்களும் 'ஸூட்'டைத் தவிர வேறு எதிலும் காட்சி அளிக்கவில்லை.

இப்படத்தில் வரும் காட்சிகள் நாம் மேற்கத்திய முறைகளிலும், உடைகளிலும் மோகம் கொண்டிருக்கிறோம் என்பதை அதிகமாகப் பிரதிபலிக்கிறது. இந்த ஹிந்திப் படத்தைப் பார்ப்பதற்குப் பதிலாக இன்னொரு இங்கிலீஷ் படத்தைப் பார்த்து வைக்கலாம். தாங்கள் சொல்லுவது போல இந்தியாவிலிருந்து திரும்பிப் போகும் கலைஞர்கள் நிச்சயம் சிரிக்கத்தான் செய்வார்கள். நம்மைப் பற்றி அவர்கள் தாழ்வான அபிப்பிராயம் கொள்ளத்தான் செய்வார்கள். நாம் நம் கலாசாரத்தையும், வாழ்க்கையையும் அவர்களுக்கு நமது படங்களின் மூலம் உணர்த்துவதற்குப் பதிலாக அவர்களுடைய நாகரிகத்தையே திருப்பிக் காட்டி அவர்களை வழி அனுப்பும் விந்தையை வேறெங்கும் காண முடியாது.

மயிலாப்பூர், சென்னை
22—2—52
விஜயா ஸ்ரீனிவாஸன்

★

## நாம் என்ன செய்தோம்?

என்ன இருந்தாலும் மதராஸிலிருப்பவர்கள் அதிர்ஷ்டசாலிகள்தான். நல்லதோ கெடுதலோ அனுபவிக்கலாம். கிரிக்கெட் மேட்ச், ஒலிம்பிக் விளையாட்டு, பிலிம் விழா எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகப் பார்த்து அனுபவிக்கக் கொடுத்து வைத்திருக்கின்றார்கள். அயல் நாட்டில் உருவான படங்களின் கதைகளைப் படிக்கும்போது நாமும் பார்த்து அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லையே என்ற எண்ணம் உண்டாகாமல் இல்லை. பிலிம் விழாவின் போது 'பாதாள பைரவி'யின் கதையைப் பார்க்காமல் பாதியில் எழுந்து சென்ற வெள்ளைக்காரரின் நிலையைக் காணும்போது பச்சாதாபம் ஏற்படுகின்றது. எனினும், பதினாயிரம் அடியையும் பார்த்துத் தலைவலி உண்டாக்கிக் கொள்ளாமல் சென்றதற்குக் காரணமான பைரவியைப் போற்றத்தான் வேண்டும். ஒரு காலத்தில் புராண இதிகாசங்களைப் படம் பிடித்து மக்களின் மனத்தில் பக்தி முதலிய நல்ல உணர்ச்சிகளை அடியோடு போக்கிப் பாபச் செயலில் ஈடுபடத் தூண்டியது. அதற்குப் பிறகு இப்போதெல்லாம் ஜனம் ஜனம் என்று சமுதாயத்தைப் பழித்துப் படம் எடுத்துப் பணம் சேர்க்கின்றனர். சுதந்திரம் அடைந்து விட்டோமல்லவா! நாமும் நம் நாடும்

உயருவதற்கு, நமது பண்பாட்டை உயர்த்திக் காட்டும் படமாக ஏதாவது ஒன்று எடுத்தோமா! வெள்ளையர்கள் வெளியேறி விட்டாலும் அவர்களின் ஆவி இங்கே வட்டமிடுகின்றது போலும். இந்தியன் இந்தியனாக இல்லை. வெள்ளையனாக மாறப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்கின்றான். தமிழ் நாட்டில் தமிழுக்குப் பிரதானம் என்கின்றனர். ஆங்கிலம் வேண்டாம் என்கின்றனர். எங்கே! பள்ளிக்கூடத்திலே! ஆனால் ஆங்கில பாணியிலே ஆரம்பக் கல்விச்சாலைக்கு பையன் அனுப்பப்படுகின்றான். ஆங்கிலேய அநாகரிகம், அரைகுறை ஆங்கிலத்தில் எல்லோரிடமும் உரையாடல் — ஆங்கில மெட்டுக்களில் பாட்டு,— ஆங்கிலேயர் அநாகரிகத்தை அடிப்படையாகக் கொண்டு சினிமாப் படம்—இன்னும் எத்தனையோ!— ஆகையால் நாடு சுதந்திரம் பெற்றும் மேல் நாட்டு நாகரிகத்திற்கு அடிமையாக இருந்து கொண்டிருப்பதைத் தவிர, நம் கலாசார முன்னேற்றத்துக்கு நாம் என்ன செய்தோம்!

கோயமுத்தூர்
26—2—52 சி. எம். சுப்ரமணியம்

★

## என்ன தவறு?

"மனிதன் எப்படி உயருகிறான்!" என்ற தங்கள் கட்டுரையைப் படித்தேன். மனிதனுடைய உயர் பண்புகளையும் நாட்டின் சௌரவத்தையும் உயர்த்துவதாகத் திரைப்படங்கள் இருக்கவேண்டுமென்ற தங்கள் கருத்தை யாவரும் வரவேற்பார்கள். அதோடுகூட, சமூகத்தில் இன்று காணும் தீமைகளையும் அதன் விளைவுகளையும் காட்டவேண்டும்; மனிதன் பலஹீன உணர்ச்சிகளுக்கு அடிமையாவதால் நேரும் பலாபலன்களையும் படங்கள் சித்தரிக்க வேண்டும் என்பதை நீங்கள் மறுக்கமாட்டீர்கள் என நம்புகிறேன்.

"சம்ஸாரம்" என்ற படத்தைப் பற்றி என் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன். தொல்லைகளும் பிடுங்கல்களும் அளவு மீறிப் போகையில், கடமைப் பொறுப்புக்களைத் துறந்தோடும் மனோபாவம் சிலருக்கு ஏற்படுவது சகஜம்தான். 'சம்ஸாரம்' படத்தின் கதாநாயகன் அத்தகைய உணர்ச்சிக்கு அடிமையாகி விடுகிறான் போலும்! பொறுப்பற்ற அவனது இச்செய்கையினால், அவன் மனைவி மக்கள்படும் அவதியைத் தெளிவாகக் காட்டுகிறது படம். இது தவறாகுமா!

அடுத்தபடியாக மோட்டார் ஷெட் காட்சியை காரசாரமாகக் கண்டிக்கிறீர்கள். அதன் சொந்தக்காரர் போன்றும் அதையும் விட மோசமாக நடந்து கொள்வோரும் நம் நாட்டில் இருக்கிறார்கள். ஏழை எளியவர் கஷ்டங்களை உணராத செல்வச் செருக்குக் கொண்ட கல்நெஞ்சர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இல்லையென்று மறுக்க முடியுமா! ஆகவே மோட்டார் சொந்தக்காரரின் கொடுமையைப் படத்தில் சித்தரித்திருப்பது உண்மைக்கு மிகவும் இயைந்ததே யாகும்.

தாயார், குழந்தைகளைப் பிச்சையெடுக்க அனுப்புவதும் உங்கள் கண்டனத்திற் குள்ளாகியிருக்கிறது. இதுவும் சரியல்ல. நிர்க்கதியாய் விடப்பட்ட ஒரு ஸ்திரீ, தனது கற்பைக் காத்துக் கொள்ள விரும்பும் ஸ்திரீ, வேறு வழியின்றி, சந்தர்ப்ப நிர்ப்பந்தங்களின் காரணமாக, மிகத் துயரத்துடன், பிச்சைக்கு அனுப்புகிறாள் தனது குழந்தைகளை. சோகம் நிறைந்த இந்தக் கட்டம் மக்கள் மனதை உருக்குவதாக அமைந்ததில் வியப்பொன்றுமில்லை. நமது சமூகத்தில் மலிந்துள்ள இன்னல்களில் பிச்சை எடுக்கும் தொழிலும் ஒன்றாகும். இதைக் களைந்தெறியப் பாடுபட வேண்டும். ஆனால் இன்று நாம் கண்கூடாகப் பார்ப்பதை, ஏன் படத்தில் காட்டலாகாது! உண்மை நிலையை எடுத்துக் காட்டுவது தவறா!

புதுடில்லி
26—2—52 ஓ. என். நாகரத்தினம்

★

## கடன் குறைப்புத் திட்டம்

நாடு சுபிட்சமடைய வேண்டுமானால் மத்தியதர வகுப்பினரின் குறைகள் அகற்றப்பட வேண்டும். மேற்படி வகுப்பினர் கடன் பளுவினால் அதல பாதாளத்தில் வீழ்ந்து அழிந்துவிடக் கூடிய நிலையில் இருக்கிறார்கள். வேலை யில்லாத திண்டாட்டத்தினாலும், வாழ்க்கைக்கு வேண்டிய ஊதியம் இல்லாததினாலும், கடன் வாங்கித் தங்கள் வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். அதனால் தாங்கள் வாங்கிய கடனுக்கு வட்டி கட்டுவதற்குக் கூட அவர்களால் முடியவில்லை.

விவசாயக் கடன் நிவாரணச் சட்டம் கொண்டு வந்து விவசாயிகளுக்கு நிவாரணம் கொடுத்தது போல் ஒரு சட்டம் கொண்டு வந்து நிவர்த்திக்காவிடில் மத்தியதர வகுப்பினர் பூண்டோடு அழிக்கப்பட்டு விடுவார்கள். அப்படி அழிய நேரிட்டால் அரசாங்கம் நிலைக்காது; தொழில்கள் நடக்காது.

உணவு, உடை, வீடு இவைகள்தாம் மக்களுக்கு அரசாங்கம் உடனடியாகத் தீர்க்க வேண்டிய பிரச்னை. ஆனால் மக்களின் கடன் பளுவைக் குறைத்துவிட்டால் மேற்படி மூன்று பிரச்னையும் தீர்ந்து விடும். கடன் பளுவானது வட்டி என்னும் கொடிய ரூபத்தில் வந்து மத்திய வகுப்பாரின் வருவாயைப் பெரிதும் விழுங்கி விடுகிறது. ஆகையால் அவர்களால் மற்ற வாழ்க்கை வசதிகளைச் செய்து கொள்ள முடியவில்லை.

மத்தியதர வகுப்பினர்களின் மொத்தக் கடன் ரூ. 500 முதல் ரூ. 10,000 வரை உள்ளவற்றை அரசாங்கம் தன் பெயருக்கு மாற்றிக் கொண்டு, கடன் பட்டோர்களிடமிருந்து மூன்றரை சத விகிதம் வட்டியுடன் கூடிய 20 வருட காலக் கடன் பத்திரங்களைப் பெற்றுக்கொள்ள வேண்டும். கடன் கொடுத்தவர்களுக்கு மூன்று சத விகித வட்டியுடன் கூடிய 20 வருட காலக் கடன் பத்திரங்களாகக் கொடுக்க வேண்டும். அரை சத விகித வட்டியை நிர்வாகச் செலவுகளுக்கு வைத்துக் கொள்ளலாம்.

கடனை அரசாங்கம் தன் பெயருக்கு மாற்றிக் கொள்ளும்போது கூடுமான வரையிலும் கடனாளிகள் தராதரத்தை அனுசரித்துக் குறைத்துவிட வேண்டும். இதை நிர்ணயிக்க மத்தியஸ்த போர்டு ஒன்றை நியமிக்க வேண்டும்.

கடன் பட்டோர்களை மேற்படியார்கள் பட்டிருக்கும் கடன் தொகைக்குச் சமமாக ஒரு இன்சூரன்ஸ் பாலிஸி எடுத்துக் கொள்ளும் படியாகச் செய்து கடன் தவணைகள் பிரீமியம் என்ற முறையில் வசூலிக்கப்பட வேண்டும். கடன் பட்டோர் இறந்து விட்டால் கடன் கொடுத்தவர்களுக்கு இன்சூரன்ஸ் கம்பெனிகள் விதிகளின்படி பணம் கொடுக்கப்பட வேண்டும். இதனால் கடன் பட்டோர்களின் கடனும் ரத்தாவதுடன் கடன் கொடுத்தவர்களுக்கு அரசாங்கத்தினால் கொடுக்கப்பட்டிருக்கும் பத்திரங்களும் செல்லாகின்றது. இதனால் பண வீக்கம் குறையும். அரசாங்க மூலதன செலவுகளுக்குப் பெரும் தொகைகளும் கிடைக்கும்.

இதை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர ஒரு பெரிய இயக்கமே நடத்த வேண்டும்.

நாகப்பட்டினம்
22—2—52 சி. ராமசாமி




சற்று முன் பூவுலகெங்கும் அமுத ஒளி பூசிச் சிரித்த வெண்மதியின் உடலில் பரவிப் படர்ந்து விட்ட கிரகணக் கருமையைப் பார்த்து விட்டு அர்த்த புஷ்டியுடன் கமலியின் பக்கம் திரும்பிப் புன்னகைத்தான் அவன். அந்தப் பார்வையில் பொதிந்து கிடந்த ரகசியங்களைப் புரிந்து கொள்ள அவளுக்கு அதிக நேரம் ஆகவில்லை. அவள் முகத்திலும் புன்னகையின் மெல்லிய ரேகையொன்று ஜொலித்து ஓடி மறைந்தது.

சற்றுத் தள்ளி, வராந்தாவின் மூலையில் கைப்பிடிச் சுவரில் சாய்ந்த வண்ணம் வானத்தையே வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான் அவர்கள் புதல்வன் ரவி. சேர்ந்தாற்போல, இருவர் பார்வையும் அவன் பக்கம் திரும்பியது.

கீழே, தெருவில் ஜனங்கள் கும்பல், கும்பலாக நின்று கிரகணத்தைப் பற்றி ஏதேதோ பேசிக் கொண்டிருந்தனர். சிறுவரும், சிறுமியரும் குதித்துக் கொம்மாளமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

கமலி, திரும்பித் தன் கணவனைப் பார்த்தாள்.

அவன், தன் மகன் ரவியின் முகத்தையே ஏனோ வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் உள்ளத்தில் இன்னின்ன எண்ணங்கள் தாம் ஓடிக் கொண்டிருக்க முடியும் என்று அவளால் ஊகிக்க முடிந்தது.

கிரகணம் சந்திரனை நன்றாகப் பிடித்து விட்டது. ஒளி மெல்ல மெல்ல மெலிந்து இருளிலே கரைந்து மறைந்து போயிற்று.

பௌர்ணமியை அமாவாசையாக மாற்றும் அந்தக் கிரகணத்தை அவள் ஏதோ பயங்கரமாகத் தான் எண்ணினாள். ஏன், நிம்மதியாய், அமுதமாய் இசைந்துவந்த அவர்கள் வாழ்விலும் சலனம் விளைத்துப் பயங்கரம் புகுத்தியது இதே சந்திர கிரகணம் தானே!

அவர்கள் இருவருமே அப்போது இப்படித் தான் நினைத்துக் கொண்டார்கள்.

"கிரகணம் நன்றாகப் பிடித்துவிட்டதா அம்மா!" என்று சொல்லிக் கொண்டே ஓடி வந்தான் குழந்தை ரவி. இருட்டிலே மங்கலாகத் தெரிந்த அவனை அவர்கள் கனிவுடன் பார்த்தனர்.

ஏதோ நினைத்துக் கொண்டதைப் போல அவள் கணவன் சட்டெனத் திரும்பினான்.

"கிரகணம் விட இன்னும் ரொம்ப நேரம் ஆகும். கொஞ்ச நேரம் தூங்கலாம் வா!" என்றான் அவன் சிந்தனையோடே.

ரவிக்குத் தூக்கம் கண்ணை அழுத்திற்று. கொட்டாவி விட்டுக்கொண்டே படுக்கையில் படுத்தவன் உடனே தூங்கியும் போய் விட்டான். அவர்கள் இருவரும் கிரகணம் கிளம்பிய நினைவுச் சலனத்தில் இறங்கித் தங்களை மறந்து கிடந்தனர்.

கமலி அப்போது எட்டு மாத கர்ப்பிணியாயிருந்தாள்.

அன்றும் இதே சந்திர கிரகணம்தான்! அவள் அப்போது தன் பிறந்த வீட்டில் இருந்தாள். தற்செயலாக அன்றைக்கு அவள் கணவன் நடேசன் அங்கே வந்திருந்தான்.

மாலை நாலு மணி இருக்கும்.

அவன் மாடி அறையில் ஏதோ படித்துக்கொண்டிருந்தான். மடமட வென படிக்கட்டுகளில் அவள் ஏறி வரும் சத்தம் கேட்டது. புஸ்தகத்தை வைத்துவிட்டு, யார் வருவது என்று பார்க்க நிமிர்ந்து உட்கார்ந்தான்.

சிந்தனை கவிந்த முகத்துடன் அவனருகே வந்து நின்றாள் அவன் மனைவி கமலி.

"என்ன இது! தலைகூட வாரிக்காமல்......"

"நான் இன்றைக்கு ஒன்றுமே செய்துகொள்ளப் போகிறதில்லை..." வேதனை கலந்த குரலில் தான் அவள் பேசினாள். அவனுக்கு அதன் காரணம் ஒன்றும் புரியவில்லை.

"ஏன் கமலி என்ன இந்தத் திடீர்க் கோபமெல்லாம்! யார் உன்னை என்ன சொன்னார்கள்!" என்று கனிவுடன் கேட்டவாறே பக்கத்தில் அவளை உட்கார வைத்தான் அவன்.

"இன்றைக்குக் கிரகணத்தை நான் பார்க்கக் கூடாதாம். கர்ப்பிணி கிரகணத்தைப் பார்த்தால், பிறக்கிற குழந்தைக்கு ஏதாகிலும் உடம்பிலே குறைப்பட்டுத் தான் பிறக்குமாம். அதனாலே நான் இப்பவே போய் ஒரு ரூமிலே அடைந்து கிடக்கணுமாம். இதெல்லாம் என்ன பைத்தியக்காரக் கொள்கைகளோ!" என்று வெறுப்புடன் சொரிந்து கொட்டினாள் அவள்.

நடேசனுக்குச் சாஸ்திரத்திலும், நமது பழக்க வழக்கங்களிலும் நல்ல நம்பிக்கை யில்லாவிட்டாலும் அவற்றையெல்லாம் மூடக் கொள்கைகள் என்று அவன் ஒதுக்கி விடத் தயாராயில்லை.

"இல்லை கமலி குழந்தை மாதிரி அவசரப்படுகிறாயே! அவர்கள் சொல்லுவது நியாயந்தான். நீ இன்றைக்குக் கிரகணத்தைப் பார்க்கக் கூடாது தான்" என்றான் அவன்.

கமலி அவன் சொல்லுவதை அத்தனை லகுவில் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. சிறு குழந்தையைப் போலப் பிடிவாதம் பிடித்தாள்.

"எத்தனை நாள்தான் குழந்தையாகவே இருக்க முடியும், கமலி. நீ இப்போ ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறாய். சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் அடம் பிடித்துக் கொண்டிருந்தால் சுத்தமாக நன்றாயில்லை"......அவளுடைய முரட்டுப் பிடிவாதத்தைப் பொறுக்க முடியாமல் அவன் சற்றுக் கோபமாகவே தான் பேசினான்.

அவளுக்கு ரோஷந்தான் பொத்துக்கொண்டது. கண்ணைக் கசக்கிக் கொண்டு குழந்தை போல விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டாள்.

அவன் இதை எதிர்பார்க்கவில்லை. இத்தனை அற்ப விஷயத்தில் கமலி இவ்வளவு ஆசைப்பட்டு முரண்டு பிடிப்பது அவனுக்குச் சற்று வேடிக்கையாகத்தான் இருந்தது.

"சரி சரி. மயான காண்டம் ஆரம்பித்து விடாதே. நீ எந்த அறையிலும் போய் அடைந்து

கிடக்க வேண்டாம். பேசாமல் மாடிக்கே வந்து இருந்து விடு. கண்ணைக் கசக்காமல் இருக்க வேண்டும்'' என்றான் அவன், பாதி கேலியும், பாதி உண்மையுமாக.



தான் விரும்பிய பொருளை அடைந்து விட்ட சின்னஞ் சிறு குழந்தையைப் போல அவள் மகிழ்ந்தாள்.

தன் அம்மாவிடம் "நான் மாடி உள்ளிலேயே போய் இருந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு ஒரு கணத்திற்குள் வந்து விட்டாள்.

நடேசனுக்கு என்னவோ அவள் கிரகணத்தைப் பார்ப்பதில் பிடித்தம் இல்லைதான். மாடிக்கு அவள் வந்த பின்பும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். அவள் சரியான முரட்டுக் குழந்தையாகத்தான் இருந்தாள். 'நடந்தபடி நடக்கட்டும்' என்று கடைசியில் அவனும் விட்டு விட்டான்.

சந்திரனின் பாதி உடலை மட்டும் போர்த்தியிருந்த அந்தப் பட்டுக் கருந் திரையை அன்று கமலி பார்க்கத்தான் செய்தாள்.

நாட்கள் ஓடின. குழந்தை பிறந்தது.

குழந்தைக்கு ஒரு குறையும் ஏற்படவில்லை. குழந்தை என்னவோ மூக்கும் முழியுமாக நன்றாகத்தான் இருந்தது. வலது காது மட்டும் ஏதோ ஒரு மாதிரி இருந்தது. இருந்தாலும் அது ஒரு அவலட்சணமாக இல்லை. ஆனால் பார்ப்பவர்கள் எல்லாரும் குழந்தையின் திவ்வியமான அழகை விட்டுவிட்டு, அந்தக் காது ஒரு மாதிரி இருப்பதையே ஒரு பெரிய குறையாகச் சொல்லி வேதனைப் பட்டுக் கொண்டனர்.

ஆசையுடன் தான் பெற்ற செல்வத்தைப் பார்த்த கமலியின் முகம் மலரத்தான் செய்தது. இருந்தாலும் அந்தக் காது அப்படி இருப்பதற்கு அவள்தான் காரணம் என்று எல்லாரும் சொல்லுவது அவளுக்குச் 'சுருக்'கென்று தைத்தது. சற்று வேதனையாகத்தான் இருந்தது.

காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது என்பதுபோல எல்லாரும் எண்ணியதற்கு ஏற்றாற்போல ஒரு சிறு குறையுடன் குழந்தை பிறந்தது.

வெளிப்படையாக வீட்டிலுள்ளோர் எல்லோருமே குழந்தையின் இந்தக் குறைக்கு அவள்தான் காரணம் என்று குற்றம் சாட்டினர். முக்கியமாக அவன் தாய்தான் எப்போதும் தொண தொணத்துக் கொண்டே இருந்து வந்தாள்.

புண்யாக வசனத்துக்கு நடேசன் வந்தான். 'மூக்கும் முழியுமாய்' அழகு பிம்பமாய் இருந்த குழந்தையை எடுத்துக் கொஞ்சி மகிழ்ந்தான். ஆனால் அந்த மகிழ்ச்சியை அனுபவிக்கச் சுற்றியுள்ளவர்கள் விடவில்லை. அந்தக் குழந்தையின் வலது காது ஒரு மாதிரி இருப்பதைச் சுட்டிக் காட்டினர். அதற்கு அவன் மனைவிதான் காரணம் என்று அடித்துக் கூறினர். அவன் களங்கமற்ற மனமும் வேதனைப்பட ஆரம்பித்தது.

குழந்தைக்கு நாமகரணம் சூட்டும் போது, குழந்தையின் காதருகில் நாமத்தை உச்சரிக்கச் சொன்னார் புரோகிதர். குழந்தையின் காதருகில், குனிந்த போது அவன் மனதை என்னமோ செய்தது.

ஆனால், அவன் கமலியிடம் இதுபற்றி வாய் திறந்து ஒன்றும் கேட்கவேயில்லை.

அவன் அருகே வரும்போதெல்லாம் கமலி அவனை மன்னிப்புக் கோரும் முறையில் ஏக்கத்துடனே பார்த்தாள். அவன் பேசாமல் மௌனமாய் சிந்தனை தேங்கிய முகத்துடன் சென்று விடுவான்.

அவன் ஊருக்குப் புறப்படும்போது கமலி அவனிடம் கேட்டாள். "என்னை மன்னித்து விடுவீர்களா!'' என்று. அவள் குரல் தழு தழுத்தது.

அவன் அவளை வெற்றுப் பார்வை பார்த்தான். உள்ளே குமுறிய உணர்ச்சிகளையெல்லாம் உள்ளேயே அடைத்துப் போட்டுவிட்டுத் தலையைக் குனிந்து பதிலே பேசாமல் வெளியேறி விட்டான்.

அதற்குப்பின் நீண்ட நாளைக்குப் பிறகு அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

கம்பெனி அலுவலின் காரணமாய்க் கல்கத்தா சென்று விட்டான் அவன். எங்கெங்கெல்லாமோ சுற்றவேண்டியிருக்குமாம். நிலையான ஓரிடத்திற்கு வந்தபின் அவளை அழைத்துக் கொள்வதாய்க் கடிதம் எழுதியிருந்தான்.

அவள் வாழ்க்கையின் கசப்பை அப்பொழுது தான் உணர்ந்தாள். அதன்பின் ஒரு வருஷமாகியும் நடேசனிடமிருந்து எந்தவிதமான தகவலும் இல்லாது போகவே கமலியின் மனம் சாம்பிக் கருகிப் போய்விட்டது.

குழந்தை ரவி கடைந்தெடுத்த பதுமைபோல் அழகாக இருந்தான். காது ஒருமாதிரி இருந்தது கூட சரியாகத் தெரியவில்லை. இருந்தாலும் அந்தக் காதையே பெரிதாக எண்ணி அவள் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

பகலும், இரவும் மாறி மாறி வந்து போவதைத் தாள முடியாமல் சகித்துக் கொண்டு நடேசன் வரவை எதிர்நோக்கிக் காலத்தைக் கழித்தாள் அவள். அம்மா வேறு அவளை சதா ஏதேனும் கேட்டுத் துன்புறுத்திக் கொண்டேயிருந்தாள். ஒரு வருஷமாக நடேசனைப் பற்றிய எந்த விவரமும் இல்லாது போகவே, ஊரார் அவளுக்கு 'வாழா வெட்டி' என்று பட்டம் சூட்டினர்.



அதன்பின் அவனுக்குப் பொழுது ஊர்வதாகத் தான் தோன்றியது. ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாய் இருந்தது. நடேசனைப் பற்றிய தகவலை யாரிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ள வழி இல்லை. மனைவியைத் தவிர உற்றார் உறவினர் யாருமற்ற தனிமரம் அவன். அதனால் இனிமேல் இங்கே வராமலேயே அவன் இருந்து விடுவானோ...!

அழுது அழுது அவள் கண்களில் இருந்த கண்ணீர் கூட வற்றிவிட்டன.

எப்படியும் அவன் வருவான் என்ற நம்பிக்கையில் வாழ்ந்து வந்தாள் அவள்.

★

தனக்குப் பிறந்த குழந்தையின் அழகை அனுபவிக்காமல் எல்லாரும் சொன்ன அந்த வலது காதின் குறையையே பெரிதாக எண்ணி வருந்தினான் நடேசன். கமலியின் அசட்டுப் பிடிவாதம் தான் அவன் கண் முன் எழுந்து நின்றது. அவனுக்கு வந்த கோபத்தில் அவளை அறைந்துகூட இருப்பான். ஆனால் அவள் அன்பு கோபத்தை ஓரளவு சமனப் படுத்திவிட்டது.

மேலும், "என்னை மன்னிப்பீர்களா!" என்று அழுது கொண்டே முறையிட்டு விட்டாள் அவள்.

அவன் கோபம் ஆறியது என்னவோ வாஸ்தவம் தான். ஆனால் அவள் மீது அவனுக்கு அர்த்தமில்லாத ஒரு வெறுப்புக் கிளர்ந்து விட்டது. அந்த வெறுப்புடனேயே வெளியேறியவன் தான்.

கல்கத்தாவிலிருந்த கம்பெனி அலுவலைத் தானே போய்க் கவனித்துக் கொள்வதாக அவன் வலுவில் முன் வந்துவிட்டான்.

அந்த வேலை கொஞ்சம் கஷ்டமானதுதான். அலைச்சலுக்குச் சற்றும் சளைக்காத மனிதன்தான் அதை ஏற்றுக்கொள்ள முடியும். நடேசன் தானே முன் வந்தபொழுது, கம்பெனியில் அவனுக்கிருந்த மதிப்பு இன்னும் உயர்ந்தது. அவன் சம்பளமும் அவன் எதிர்பாராத விதமாய் உயர்ந்தது.

அவன் சந்தோஷத்துடனும் குதூகலத்துடனும் கல்கத்தாவிற்குப் பிரயாணமானான்.

ஊருக்குக் கடிதம் போட வேண்டும் என்று எப்போதாவது அவன் மனத்தில் தோன்றத்தான் செய்யும். உடனேயே காரணமில்லாத ஏதோ ஒருவகை வெறுப்பில் அதைக் கை கழுவிவிடுவான் அவன். ஊர் சுற்றித் திரிந்து கொண்டிருப்பான்.

இப்படியே ஒரு வருஷம் ஓடி விட்டது.

மதவெறிக் கொலைகள் கல்கத்தாவில் அப்போது தான் ஆரம்பம் ஆயின. கல்கத்தாவுக்குச் சற்றுத் தொலைவிலுள்ள ஒரு கிராமத்தில் அவன் அன்றிரவு தங்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

இரவு சுமார் ஒரு மணியிருக்கும்.

அவன் படுத்திருந்த அறையைச் சுற்றிலும் அழுகையும், கூச்சலும் அமளி துமளிப் பட்டன. ஜனங்கள் அங்கும் இங்கும் பரபரப்புடன் ஓடிக் கொண்டிருந்தனர். அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த அவன் கரத்தை வலுமிகுந்த மற்றொரு இரும்புக் கரம் பிடித்தது.

"முட்டாள்தனமா, இப்போ எங்கேயும் வெளியில் வந்துவிடாதே! நான் சொன்னபடி செய்!" என்றார் எதிரே நின்ற அந்த முஸ்லிம் பக்கிரி.

"ஏன்!" என்று எரிச்சலுடன் கேட்டான் நடேசன். "தூக்கம் இன்னும் நன்றாகக் கலையவில்லையா உனக்கு!" என்று ஆத்திரத்துடன் கேட்டு விட்டு, "வெளியே என்ன நடக்கிறது என்று உனக்குத் தெரியவே இல்லையா, என்ன! எங்கள் இனத்தைச் சேர்ந்த மத வெறியர்கள் அதோ கீழ் அறைக்குள் புகுந்து விட்டார்கள். அவர்கள் மேலே வந்து சேர இன்னும் அதிக நேரமாகாது. இங்கே அவர்கள் வந்து விட்டால் நீ பிழைப்பது அபூர்வம்தான்" என்று பக்கிரி சொன்னார்.

"அப்போ என்னை என்ன செய்யச்சொல்கிறீர்!"

"நான் சொல்லுகிறபடி செய், போதும். என்னை நம்பு. நான் உன்னை எப்படியும் காப்பாற்றிவிடுகிறேன்" என்றார் பக்கிரி.

பக்கிரியை நடேசன் நம்பத்தான் செய்தான். பக்கத்து அறையில்தான் பக்கிரி குடியிருந்தார்.

ஆகவே அவரை நடேசனுக்கு ஓரளவு தெரியும். மேலும், அப்போதிருந்த நெருக்கடியான நிலையில் யாரையாவது நம்பித் தானே ஆகவேண்டும்!

பக்கிரி நடேசனை ஒரு முஸ்லிம் போல உடை உடுத்திக் கொள்ளச் செய்தார்.

"பேசாமல் என்னோடு வா, யாரிடமும் ஒன்றும் பேசாதே!" என்று உத்தரவிட்டு விட்டு அவனை அழைத்துக் கொண்டு நடந்தார்.

கேழ் ஓலமும் கூச்சலும் விண்ணை அதிரச் செய்தன. வழியில் இவர்களை மறைத்த ஓரிரு முஸ்லிம் மதவெறியர்கள் பக்கிரியைக் கண்டதும் வாய் பேசாமல் விலகி வழி விட்டனர்.

கூச்சலும் ஓலமும் ஓய்ந்து போயின.

அவர்கள் அந்தக் கிராமத்தின் எல்லை முனைக்கு வந்திருந்தனர். நிலவொளியில் பக்கிரியின் முகத்தை நன்றியுடன் பார்த்தான் நடேசன்.

"இந்த உங்கள் உதவியை நான் என்றும் மறக்க முடியாது!" என்றான் உணர்ச்சி பொங்க.

"என் உதவி ஒன்றுமில்லை, தம்பி. உன் ஆயுள் கொஞ்சம் கெட்டி. அவ்வளவுதான். எங்கே, உன் கையை நீட்டு பார்க்கலாம்."

நடேசன், பக்கிரியின் கனிவு பொங்கும் முகத்தைப் பார்த்தவாறே வலது கரத்தை நீட்டினான்.

"இல்லை தம்பி. நீ இன்றைக்குப் பிழைத்தது யார் புண்ணியத்தாலும் இல்லை. உன் மகனின் அதிர்ஷ்டத்தாலேதான்" என்றார் பக்கிரி.

நடேசன் ஒரு கணம் மலைத்து நின்றான்.

"என்ன சொல்லுகிறீர்கள்!"

"உனக்கு ஒரு மகன் இல்லையா! அவனுக்குள்ள அதிர்ஷ்டம்தான் இப்போது நீ பிழைத்து வந்திருக்கிறாய்" என்று பக்கிரி கூறிவிட்டு அவன் கையை முத்தமிட்டுக் கொண்டார்.

நடேசனுக்கு உள்ளத்து பயங்கரங்களெல்லாம் ஒரு கணம் ஸ்தம்பித்துப் போயின.

"உன் மகன் அதிர்ஷ்டம் தான்......"

பக்கிரியின் வார்த்தைகள் அவன் முன் சுழன்று சுழன்று வந்தன. அவன் மனம் மாறியது.

நன்றியுடன் பக்கிரியின் கைகளைப் பிடித்துக் கொண்டான். அந்த நாளிலே, அந்த நேரத்தில், ஊர் நினைவு, கமலியின் முகம், குழந்தையின் பாசம் எல்லாம் வந்து அவனைப் பிணைத்து விட்டன.

அடுத்த வாரமே சொல்லாமற் கொள்ளாமல் லீவு போட்டுவிட்டுக் கமலியையும் தன் மகனையும் பார்க்கப் புறப்பட்டு விட்டான் அவன்.

★

படுக்கையில் படுத்துப் புரண்டு கொண்டிருந்த கமலியும் நடேசனும் சொல்லி வைத்தாற்போலத் திரும்பி ஒருவரை ஒருவர் பார்த்தனர்.

அவன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான்.

அவளும் எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

"கிரகணம் விட்டுவிட்டதா, பார்க்கலாமா!" என்றான், அவன் எழுந்து நின்று கொண்டு.

"நம் வாழ்க்கையைப் பிடித்திருந்த கிரகணம் தான் எப்பொழுதோ விட்டுவிட்டதே!" என்று சொல்லிக் கொண்டே வந்தாள் அவள்.

வானத்திலும் அப்போது கிரகணம் விட்டுச் சந்திரன் முழு உருவுடன்தான் காட்சியளித்தான்.

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

# S. S. "ரஜுலா"

| | | | | |
|---|---|---|---|---|
| சென்னை | புறப்படும் | தேதி | — | 1952 மார்ச் 8உ |
| நாகப்பட்டினம் | புறப்படும் | தேதி | — | 1952 மார்ச் 9உ |

கப்பல் புறப்படும் தேதி காலை 8 மணிக்கு மேல் சாமான்கள் ஏற்றப்படமாட்டா.

கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள்:

**சென்னையிலிருந்து 8-3-52:** *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 10 மணிக்கும் ஸலூன் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

**நாகப்பட்டினத்திலிருந்து 9-3-52:** *பெர்த் வசதியற்ற டிக்கட்டுள்ளோர் காலை 6 மணிக்கும் ஸலூன் டிக்கெட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 8-3-52 பகல் 1 மணிக்கு மேல் வந்தால் வைத்ய பரிசோதனைக்கு தாமதமாகிவிடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினாங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டி விருப்ப நாள் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இனாகுலேஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லுபடியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்<br>7, அரமனைக்காரத் தெரு, மதராஸ் | மதுரா கம்பெனி லிமிடெட்<br>முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

# பெரியவர்களுக்கும் குழந்தைகளுக்கும்






ப்ரூக்லாக்ஸ்

# மலச்சிக்கலை

## ஒரே இரவில் அகற்றுகிறது

ஏஜெண்டுகள்:

**ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜென்ஸி**

80.A. அரண்மனைக்காரத்தெரு, மதராஸ்-1.



# பத்மாவின் பிரார்த்தனை

வசு

அன்று காலை ரகுபதி ஆபீசுக்குக் கிளம்பும் போது அவன் மனைவி பத்மா "சீக்கிரம் ஆபீஸ் விட்டதும் வந்து விடுங்கள். சாயங்காலம் கோவிலுக்குப் போய் விட்டு வர வேண்டும். மறந்து போய் விடாதீர்கள்" என்றாள். "ஆமாம் கோவிலுக்குப் போக வேண்டும், அதற்குப் பிறகு சினிமாவுக்குக் கூடப் போக வேண்டும்" என்றான் ரகுபதி சிரித்துக் கொண்டே.

வீட்டு வாசல் வரை வந்து ரகுபதி ஆபீசுக்குப் புறப்படுவதைப் பார்த்து விட்டு உள்ளே திரும்பி வந்தாள் பத்மா. அன்று ரகுபதிக்கும் பத்மாவுக்கும் கலியாணமாகி மூன்றாவது வருஷ ஆரம்பம். அதற்காக அன்று நல்ல விருந்து தயாரித்து ரகுபதியை ஆற அமர இருந்து விருந்தை அனுபவித்துச் சாப்பிடச் செய்து ஆபீசுக்கு அனுப்பினாள் பத்மா.

பிறகு தானும் சாப்பிட்டு விட்டுக் கூடத்தில் வந்து உட்கார்ந்தாள். அப்பொழுது 'தபால்' என்ற சத்தம் கேட்டது. வாசலுக்குப் போனாள். அதற்குள் தபால்காரன் கதவு இடுக்கு வழியாகக் கடிதத்தை உள்ளே போட்டு விட்டுப் போய் விட்டான்.

தபாலில் வந்த கவரை எடுத்துப் பார்த்தாள். அந்தக் கடிதம் அவளுக்கே வந்திருந்தது. கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தாள்.

அன்புமிக்க பத்மாவுக்கு, சாரதா அநேக நமஸ்காரம். இந்தக் கடிதம் உன் கைக்குக் கிடைக்கும் போது இதே தேதியில் இரண்டு வருஷங்களுக்கு முன் நடந்த உன் விவாக தினத்தை முன்னிட்டு இந்த நாளைச் சந்தோஷமாகக் கொண்டாடிக் கொண்டிருப்பாய் என்று நினைக்கிறேன். அப்படியெல்லாம் நீ இருக்கப் போவதாக உனக்குக் கலியாணமாவதற்கு முன் என்னிடம் சொல்லியிருக்கிறாய். அதனால்தான் குறிப்பிடுகிறேன். நீயும் உன் அருமைக் கணவரும் என்றென்றைக்கும் சந்தோஷத்துடன் இருக்க வேண்டும்.

உனக்குக் கல்யாணமாகி இரண்டு வருஷங்கள் கழித்து நான் உனக்குக் கடிதம் எழுதுவதைப் பற்றி நீ ஆச்சரியப்படலாம். ஆனால் அதற்குக் காரணம் இருக்கிறது. உன் கலியாணத்துக்கு முன் நானும் என் குடும்பத்தாரும் சேர்ந்து உனக்கு இழைத்த தீங்கை நினைத்து மனம் வெதும்பி உன்னிடம் மன்னிப்புக் கோருவதற்காக இதை எழுதுகிறேன். உன் தாயாருக்கு ஏதோ ஒரு கொடிய வியாதி இருந்ததாகவும், அதே காரணத்தால் எதிர்பாராத விதமாக அவருக்கு முடிவு ஏற்பட்டு விட்டதாகவும் தெரிவித்து உன் கணவருக்கு எங்கள் குடும்பத்தார் எழுதிய அநாமதேயக் கடிதங்களுக்கு நானும் ஒரு விதத்தில் ஜவாப்தாரிதான். சென்று போன விஷயங்களைத் தயவு செய்து மறந்து என்னை மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

உனக்கு நான் இழைத்த தீங்கின் பயனாகத் தானோ என்னவோ எனக்கு இதுவரை பார்த்த வரன்கள் ஒன்றாவது நிச்சயமாகவில்லை. என் கலியாணம் ஒவ்வொரு தடவையும் நிச்சயமாகும் கட்டம் வரை வந்து திடீரென்று கலைந்து போய் விடுகிறது. இப்பொழுது டெல்லியிலிருக்கும் ஒரு வரனை என் தகப்பனார் நிச்சயம் செய்வதென்று உத்தேசித்திருக்கிறார். அந்த வரன் உன் அகத்துக்காரருடன் காலேஜில் படித்த கிருஷ்ணசாமி என்பவரின் மைத்துனராம். இது விஷயத்தில் உன் அகத்துக்காரர் அவர் சிநேகிதருக்கு ஒரு கடிதம் எழுதினால் உடனே என் கலியாணம் முடிந்து விடும். அவர் சொன்னால் போதுமாம். தயவு செய்து உன் கணவரிடம் சொல்லி அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதும்படிச் சொல்ல வேண்டும். உன்னிடம் நான் ஒரு வித உதவியையும் எதிர்பார்க்கத் தகுதியற்றவள்தான். இருந்தாலும் உன்னுடைய பெருந்தன்மையை நம்பித்தான் உன்னிடம் இந்த உதவியை எதிர்பார்க்கிறேன். என்னை உன்னுடைய தங்கைபோல் பாவித்து, எனக்கு இந்த உதவியைச் செய்யத் தவற மாட்டாய் என்று நினைக்கிறேன். எதிர்பாராத விதமாக முறிந்து போன நம்முடைய சிநேகம் மறுபடியும் தழைத்து வளர வேண்டுமென்று நான் சதாசர்வ காலமும் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். —சாரதா.

இந்தக் கடிதத்தை வாசித்துப் பார்த்ததும் சாரதாவும் அவள் பெற்றோர்களும் தனக்கும் ரகுபதிக்கும் நடக்கவிருந்த கலியாணத்தை நடக்க விடாமல் தடுக்கச் செய்த சூழ்ச்சி பத்மாவின் ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் பத்மா இயற்கையிலேயே இளகிய மனம் படைத்தவள். தவிர சாரதா, அவளும் அவள் குடும்பத்தாரும் செய்த குற்றத்திற்காக மனம் விட்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்ட பின் சாரதாவுக்குத் தான் உதவி செய்வதுதான் நியாயம் என்று நினைத்தாள்.

இருந்தாலும் அதற்கும் ஒரு தடங்கல் இருக்கத்தான் செய்தது. அது வேறொன்றுமில்லை. அதுதான் ரகுபதியின் பிடிவாத குணம். எந்த விஷயத்தையும் அவன் மனத்துக்கு நேர்மை, நியாயம் என்று தோன்றினால்தான் அதைச் செய்ய முன் வருவான். இல்லாவிட்டால் பத்மா அவனிடம் எவ்வளவு வேண்டிக் கொண்டாலும் அவன் நிர்த்தாட்சண்யமாக இருந்து விடுவான். இது அவளுடைய இரண்டு வருஷ இல்லற வாழ்க்கையில் பத்மா அறிந்து கொண்ட உண்மை. இந்த நிலைமையில் எவ்விதமாக ரகுபதியைச் சாரதாவின் கலியாண விஷயமாகக் கிருஷ்ணசுவாமிக்குக் கடிதம் எழுத ஏற்பாடு செய்வது என்பதைப் பற்றிச் சிந்தனையில் ஆழ்ந்தாள். மணிக்கணக்காக யோசனை செய்தபின் ஒரு முடிவுக்கு வந்தாள். சரியான ஒரு காரணத்தைச் சொல்லி ரகுபதியை அந்த உதவி செய்யும்படி கேட்டால் அவன் மறுக்க மாட்டான் என்று தோன்றியது அவளுக்கு. சட்டென்று அவள் மனத்தில் ஒரு யோசனையும் எழுந்தது. அதைப் பயன்படுத்தி ரகுபதியின் ஒத்துழைப்பை நிச்சயம் அடையலாம் என்று தைரியம் பிறந்தது அவள் மனத்தில்.

மாலை மணி ஐந்தடித்தது. ரகுபதி ஆபீஸிலிருந்து திரும்பி வந்தான். அவன் உடைகளை மாற்றி, கை கால்களைக் கழுவிக் கொண்டு வந்ததும், பத்மா கொடுத்த டிபனையும் காப்பியையும் சாப்பிட்டு முடித்தான். இதைத் தொடர்ந்து "ஆமாம், பத்மா! எத்தனை மணிக்குக் கோவிலுக்குப் போவது? எப்பொழுது சினிமாவுக்குப் போவது? இதில் எதை முதலில் வைத்துக் கொள்வது?" என்று கேட்டான் உத்ஸாகம் ததும்பும் குரலில்.

"விளக்கு வைத்ததும் கோவிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து விட்டு, வந்து விடுவோம். சாப்பாட்டை முடித்துக் கொண்டு சினிமாவுக்குக் கிளம்பலாம்" என்றாள் பத்மா.

"அதற்குள் நீங்கள் கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான காரியம் ஒன்று இருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே அன்றைய தபாலில் சாரதாவிடமிருந்து தனக்கு வந்த கடிதத்தை ரகுபதியிடம் கொடுத்தாள் பத்மா.

சாரதாவின் கடிதத்தை வாசித்து முடித்ததும், இரண்டு வருஷத்திற்கு முன் அவன் கலியாணத்தை ஒட்டி நடந்த சில சம்பவங்கள் ரகுபதியின் மனக்கண் முன் தோன்றின.

* * *

ரகுபதியைப் பத்மா மணந்து கொண்டது சற்றும் எதிர்பாராத விதத்தில்தான் நிகழ்ந்தது. சென்னையில் உத்தியோகமாகவிருந்த ரகுபதி அவன் கலியாண சம்பந்தமாய் மதுரையிலிருந்த சாரதாவைப் பார்க்க வந்திருந்தான். சாரதாவின் தகப்பனார் மதுரையில் வியாபாரத்தில் ஈடுபட்டு அவ்வூர் பணக்காரர்களில் ஒருவராக இருந்தார். அவர் கடையில்தான் பத்மாவின் தகப்பனாரான தக்ஷிணாமூர்த்தி சர்மா உதவி மானேஜராக இருந்தார். சாரதாவின் கலியாணத்திற்கான ஏற்பாட்டில் ரகுபதியைச் சென்னையிலிருந்து அழைத்துக் கொண்டு வந்து தகுந்த விதமாக உபசரித்து அனுப்பி வைப்பதில் தக்ஷிணாமூர்த்தி சர்மாவும் கலந்து கொண்டார்.

சாரதாவை வந்து பார்த்த ரகுபதிக்குச் சாரதாவை அவ்வளவாகப் பிடித்திருந்தாலும், அவள் குடும்பத்தாரின் டாம்பீகத்தையும் படாடோப வாழ்க்கையையும் ரகுபதியின் மனம் அறவே வெறுத்தது. இம்மாதிரி குடும்பத்திலிருந்து ஒரு பெண்ணைத் தனக்கு மனைவியாக்கிக் கொள்ள அவனுக்கு விருப்ப



மில்லை. அதற்குக் காரணம், ரகுபதி ஒரு சாதாரண குடும்பத்திலிருந்து வந்தவன். சிறு வயதிலே தாய் தந்தையரை இழந்து தூரபந்து ஒருவரால் பராமரிக்கப்பட்டு, படித்துப் பட்டம் பெற்று உத்தியோகத்தில் அமர்ந்து, சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்தவன். அதே காரணத்தால் அவன் கலியாணம் செய்து கொள்ள விரும்பும் பெண்ணும் அவள் குடும்பமும் தன்னை மதித்து நடக்கக்கூடியவர்களாக இருக்க வேண்டு மென்ற கொள்கையைக் கொண்டிருந்தான். இந்த விருப்பத்தைச் சாரதாவின் குடும்பத்தார்கள் பூர்த்தி செய்ய மாட்டார்கள் என்று பட்டது.

சாரதாவைப் பார்த்துவிட்டு சென்னைக்குத் திரும்பும்போது அவனை வழியனுப்ப ரயில்வே ஸ்டேஷன் வரை வந்திருந்தார் தக்ஷிணாமூர்த்தி சர்மா. பேச்சுவாக்கிலேயே தக்ஷிணாமூர்த்தி சர்மாவிடம் தனக்குச் சாரதாவைப் பிடிக்கவில்லை என்று தெரிவித்தான் ரகுபதி. சர்மா கேள்வி மேல் கேள்வி போட்டு ரகுபதியின் மனத்திலிருந்ததைத் தெரிந்துகொண்டார். அவர் மனத்தில் ஒரு சபலம் தட்டியது. அது வேறொன்று மில்லை. தன்னுடைய தாயில்லாப் பெண்ணான பத்மாவை, இஷ்டப்பட்டால் ரகுபதி அவன் மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற தன் அவாவை ரகுபதியிடம் தெரிவித்தார் சர்மா. ரகுபதியின் மனத்தில் ஏதோ தோன்றியது. சர்மாவின் வேண்டுகோளுக்கு இணங்கி அப்பொழுதே அவருடைய வீட்டிற்குப் போய்ப் பத்மாவைப் பார்த்தான். பத்மாவின் அழகும், படிப்பும், பாட்டும், மற்ற பயிற்சிகளும் அவன் எதிர்பார்த்த அளவுக்கு மேலேயே அவனுக்குத் திருப்தியை அளித்தன. அவளைக் கலியாணம் செய்து கொள்ளுவதாக தக்ஷிணாமூர்த்தி சர்மாவிடம் தெரிவித்தான். சென்னைக்குத் திரும்பியதும், சாரதாவின் தகப்பனாருக்குத் தான் சாரதாவை மணந்து கொள்ள இயலாததற்கு வருந்துவதாகத் தெரிவித்துக் கடிதம் எழுதி விட்டான் ரகுபதி.

சற்றும் எதிர்பாராதபடி நல்லமாதிரி வரன் தனக்குக் கிடைத்து விட்டதை மனத்தில் வைத்துக் கொண்டு துரிதமாகப் பத்மாவின் கலியாணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்தார் சர்மா. தக்ஷிணாமூர்த்தி சர்மாவின் பெண்ணுக்கு மாப்பிள்ளையாக வரப்போகிறவன் ரகுபதி என்ற தகவல் சாரதாவின் குடும்பத்திற்கு எட்டியதும் சர்மாவின் துர்ப்போதனையால்தான் ரகுபதி சாரதாவைக் கலியாணம் செய்து கொள்ள மறுத்து விட்டதாக எண்ணினார்கள். அவர்கள் அத்துடன் நிற்கவில்லை. அந்தக் கலியாணத்தை எந்தவிதமாகவாவது தடுத்துவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டு இடையூறு செய்யத் தொடங்கினர். முதன் முதலாக சாரதாவின் தகப்பனார் தக்ஷிணாமூர்த்தி சர்மாவைக் காரணம் சொல்லாமல் தன் கடையிலிருந்து விலக்கினார். மேலும் பல தொந்தரவுகளையும் கொடுத்து வந்தார்.

பத்மாவின் கலியாண தினத்திற்கு ஒரு வாரம் இருக்கும்போது சென்னையிலிருந்த ரகுபதியின் விலாசத்திற்கு ஒரு அனாமதேயக் கடிதம் வந்தது. அதில் பத்மாவின் காலஞ்சென்ற தாயாருக்கு அடிக்கடி வலிப்பு வரும் என்றும் ஒரு தடவை மதுரை வைகை நதியில் அவள் குளித்துக் கொண்டிருக்கும் போது மேற்படி வலிப்பு வந்து தண்ணீரில் அடித்துக் கொண்டு போகப்பட்டாள் என்றும், ஆகையால் பத்மாவைக் கலியாணம் செய்து கொள்ளுமுன் தீவிரமாக யோசனை செய்வது நலம் என்றும் கண்டிருந்தது.

இந்தக் கடிதத்தைப் படித்ததும் ரகுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

உடனே தக்ஷிணாமூர்த்தி சர்மாவை வரவழைத்துக் கடிதத்தைக் காண்பித்தான். அதைப் படித்ததும் சர்மா கதிகலங்கிப் போய்விட்டார். அந்தக் கடிதத்தில் கண்டிருந்த தகவல் அனைத்தும் பொய்யென்றார். பத்மாவின் தாயார் வைகை நதியில் குளித்துக் கொண்டிருக்கும்போது திடீரென்று வெள்ளம் வந்துவிட்டது. அவளுக்கு நீந்தத் தெரியாததால் அவள் வெள்ளத்தில் மூழ்க நேரிட்டது. வேண்டுமானால் இதன் உண்மையைத் தன்னுடன் வந்து விசாரித்து அறிந்துகொள்ளலாம் என்றும் ரகுபதியிடம் தெரிவித்தார். ரகுபதியின் சில உறவினர்களுக்கும் பத்மாவை ரகுபதி கலியாணம் செய்து கொள்ளுவதில் அவ்வளவாக விருப்பமில்லை. இருந்தாலும் தக்ஷிணாமூர்த்தி சர்மாவின் வார்த்தைகளில் தொனித்த நேர்மையும், அவருடைய நல்ல குணமும் ரகுபதியைக் கவர்ந்து விட்டன.



"என் அகத்துக்காரரிடம் எந்த விஷயத்தைக் கொடுத்தாலும் அதைப் பற்றி எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசுவார்!"

"அதென்ன பிரமாதம்! என் கணவர் விஷயம் ஒன்றும் இல்லாமலே நாள் கணக்கில் பேசுவாரே!"

அவர் விஷயத்தில் நம்பிக்கை வைத்துப் பத்மாவை மணந்து கொண்டான் ரகுபதி.

யோசனையில் மூழ்கிக் கிடந்த ரகுபதியைப் பார்த்து, "என்ன இப்படி ஒரேர மூச்சாகத் திகைத்துப் போய் விட்டீர்கள்!" என்று பத்மா கேட்டதும்தான் அவன் தன் சுயநினைவை அடைந்தான். "ஒன்றுமில்லை பத்மா, இருந்திருந்து சாரதாவுக்காக இந்த உபகாரத்தைச் செய்யச் சொல்கிறாயே! ஒரு காலத்தில் நம்முடைய கல்யாணத்துக்கே உலை வைக்க நினைத்தவள் என்பதை நீ மறந்து போனாலும் நான் மறக்க முடியாது" என்றான்.

"நீங்கள் சாரதாவுக்காக இல்லாவிட்டாலும் என் வேண்டுகோளுக்காவது இணங்கி உங்கள் சிநேகிதர் கிருஷ்ணசுவாமிக்குக் கடிதம் எழுதத்தான் வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள் பத்மா தழுதழுத்த குரலில்.

"பத்மா, நீ உலகம் அறியாதவள். சாரதாவுக்கு உதவி செய்வது விஷப் பாம்புக்குப் பால் வார்ப்பது போல ஆகும். ஒரு நிமிஷம் நீ யோசித்துப் பார். நான் அந்த அனுமதேயக் கடிதத்தை உண்மை என்று நம்பி யிருந்தால் என்ன நடந்திருக்கும்? பிறர் சந்தோஷத்தைக் கண்டு சகிக்காத சாரதாவுக்காக நீ பரிந்து பேசுவது பைத்தியக்காரத்தனம்" என்றான் ரகுபதி அசிரத்தையுடன்.

"நீங்கள் சொல்லுவது உண்மையேதான். இருந்தாலும் உங்கள் மறுப்பினால் என் பிரார்த்தனை நிறைவேறாமல் போய் விடும்" என்று கூறிபத்மா. மேலும் சொன்னாள்:

"நம்முடைய கலியாணம் அந்த அனாமதேயக் கடிதத்தினால் தடைப்பட்டு விடும் போலிருந்தபோது நான் மதுரை மீனாக்ஷியம்மன் சந்நிதிக்குப் போய் 'இந்தக் கலியாணம் நடந்தேறினால் என் உதவியை நாடும் எந்தக் கன்னிகைக்கும் அவள் கலியாண விஷயமாக என் சக்திக்கு உட்பட்ட உதவியைத் தயங்காமல் அளிக்கிறேன்' என்று பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன். அதை நிறைவேற்ற இதைவிட நல்ல சந்தர்ப்பமேது? அத்துடன் நானும் சாரதாவும் இணைபிரியாத தோழிகளாக இருந்தோம். ஏதோ நடுவில் நடந்த காரியங்கள் எங்களைப் பிரித்து விட்டன. அவள் செய்த அபசாரத்திற்கு அவள் மன்னிப்புக் கேட்டிருக்கிறாள். நாம் இருவரும் சந்தோஷமாக இருக்கும் இந்த நல்ல நாளில் அவள் கேட்டுக் கொண்டிருக்கும் ஒரு சிறிய உதவியை நாம் செய்யக் கூடாதா?" என்று மனமுருக மன்றாடினாள் பத்மா.

ஒரு கணம் யோசனையில் ஆழ்ந்தான் ரகுபதி. பிறகு, "பத்மா! நானும் இழுமையுமாக உனக்கு எதற்காக நான் மனக் கஷ்டம் கொடுக்க வேண்டும். நீ மீனாக்ஷி அம்மன் சந்நிதியில் போய்ச் செய்து கொண்ட பிரார்த்தனையை நிறைவேற்றி வைக்க என்னுடைய சந்நிதியை நாடி வந்திருக்கிறாய். நீ கேட்ட வரத்தை என்னால் எப்படி அளிக்காமல்



"அவர் பாடுவது காதிலேயே விழவில்லையே, ஸார்!"

"அடாடா! அவர் யார் என்று தெரியவில்லையா? அவர்தான் பழைய காலத்து மௌனப் படத்தில் எட்டரைக் கட்டை சுருதியில் பாடிய பிரபல வித்வான் ஸார்!"

இருக்க முடியும்? இப்போதே கடிதம் எழுதி விடுகிறேன். கோவிலுக்குப் போகும் வழியில் தபால் பெட்டியில் உன் கையாலேயே அதைச் சேர்த்துவிடு. இந்த விஷயத்தை நீயே சாரதாவிற்கும் எழுதிவிடு" என்று சிரித்துக் கொண்டே சொன்னான் ரகுபதி.

சில நிமிஷங்கள் கழித்து அவன் சிநேகிதன் கிருஷ்ணசாமிக்கு எழுதின கடிதத்துடன் திரும்பி வந்தான் ரகுபதி. அவன் கொடுத்த கடிதத்தைக் கையில் வாங்கிக் கொண்டு "ஒன்று சொல்லுகிறேன். நீங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. நீங்கள் இந்தக் கடிதத்தை எழுத மறுத்து விடுவீர்களோ என்று பயந்துதான் நான் ஏதோ பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதாகச் சொன்னேன். உண்மையில்......" என்று வார்த்தையை முடிக்காமல் இழுத்தாள்.

"அதனால் பாதகமில்லை பத்மா. உன்னைவிட நான்தான் சாரதா எழுதிய கடிதத்திற்காக மிகவும் கடமைப் பட்டவன். அவள் இப்பொழுது எழுதியிருந்த கடிதத்திலிருந்துதான் என் கவலை நீங்கியது. ஒவ்வொரு சமயம் என்னையும் மீறி என் மனத்தை அலட்டிக் கொண்டிருந்தது, உன் உடம்பைப் பற்றிய கவலை. ஏதோ உன்னைக் கலியாணம் செய்து கொண்டேனே ஒழிய உனக்கும் உன் தாய்க்கு உள்ளதைப் போல ஏதோ வலிப்பு இருப்பதாகவே நினைத்துக் கொண்டிருந்தேன். அந்த அனாமதேயக் கடிதம் என் மனதை வேதனைப் படுத்திக் கொண்டிருந்தது. சாரதாவின் கடிதம் எனக்கு உண்மையை உணர்த்திவிட்டது. இன்றோடு அந்தக் கவலை நீங்கி விட்டது. என்னை வழிக்குக் கொண்டு வர நீ செய்த உபாயத்தைப் பற்றி நான் உண்மையிலேயே பெருமைப் படுகிறேன்" என்றான் ரகுபதி. அவன் கைகள் பத்மாவின் கைகளைப் பரிவுடன் பற்றிய வண்ணம் இருந்தன.

# உபசாரத்திற்கு உகந்தது



**ஹேமா:-** ஏன் மாமி, நேத்திக்கு ஒரு பெரியவர் ஒங்க வீட்டிற்கு வந்திருந்தாரே...அவரை சும்மா சௌக்கியமான்னு கேட்டுட்டு அனுப்பிட்டேளே...சாப்பிட ஏதாவது கொடுத்து உபசாரம் பண்ணியிருக்கக்கூடாதா......

**பிரேமா:-** இப்போ சாமான் விக்கிற விலையிலே 'டிபன்' பண்ணலாம்னு முடியல்லே...சரி, வேறு ஏதாவது தரலாம்னு பார்த்தேன், ஆனா அவருக்கு அவசரமா போக வேண்டியிருந்ததனாலே அது எல்லாம் தயார் பண்ணறமட்டும் இருக்க முடியாதுன்னு சொல்லிட்டார்.

**ஹேமா:-** ஏன்...பேசாமே ஒரு டம்பிளர் 'டீ' கொடுத்திருக்கலாமே...'டீ'யை எவ்வளவு சீக்கிரம், எவ்வளவு சுலுவில், எவ்வளவு சிக்கனமாக தயாரிக்கலாம்!

**பிரேமா:-** ஆமாம்......உபசாரத்துக்கு உகந்தது 'டீ' தான்.

## மந்திர சக்தியுள்ள 'டீ'யைக் குடியுங்கள்.



# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரஸ்வாமி**

## 8. சந்தேக விளக்கம்

**கேள்வி :**—காலையில் ஆசனம் செய்ய முடியாதவர்கள், மாலையில் ஆசனம் செய்யலாமென்று சொல்லியிருக்கின்றீர்கள். எனக்குக் காலையில் அவகாசமில்லை. மாலையில்தான் அவகாசமிருக்கிறது. நான் பகல் சாப்பாட்டுக்கு மேல் எத்தனை மணி நேரம் பொறுத்து ஆசனம் செய்யலாம். இடையில் சிற்றுண்டி சாப்பிடலாமா? தாகம் எடுத்தால் தண்ணீர் அருந்தலாமா? டீ, காப்பி போன்றவைகளைக் குடிக்கலாமா?

**பதில் :**—பகல் போஜனம் கடினமானதாகையால் சாப்பிட்ட நேரத்திலிருந்து ஆறு மணி நேரம் பொறுத்துத்தான் ஆசனங்களை மாலையில் செய்யலாம். இடையில் சிற்றுண்டி சாப்பிடக் கூடாது. சிற்றுண்டிகளெல்லாம் பழக்கத்தின் காரணமாய் ஏற்பட்ட பொய்ப் பசியின் வழக்கமே. டீ, காப்பி சாப்பிட வேண்டுமென்ற அவசியமில்லை. அப்படி அவசியமானால் சாத்துக்குடி, ஆரஞ்சு, ஆப்பிள், மலைவாழை போன்றவைகளில் ஒரு சிறுக சாப்பிடலாம். அதையும் வயிறு நிறையப் போட்டுத் திணிக்கக் கூடாது. இவைகளில் ஒரு சிறுசில இரண்டு மூன்று பழங்களை ரசமெடுத்து அருந்தலாம். கோதுமைக் காப்பி (சாக்லேக் காப்பி) குடிக்கலாம். சுக்கு, கொத்தமல்லி காப்பி குடிக்கலாம். எலுமிச்சை பானம் பருகலாம். மோர் சாப்பிடலாம். இளநீர் குடிக்கலாம். சிலருக்கு இவைகளைச் சாப்பிடப் பிடிக்காது. இவைகளைப் பிற்பகலில் சாப்பிட்டால் சிலருக்கு ஜலதோஷம் பிடிக்கும். ஜலதோஷம் பிடிக்காதவர்கள் இளநீர் சாப்பிடலாம். தாகம் எடுத்தால் எப்பொழுதும் வேண்டிய அளவு தாராளமாகத் தண்ணீர் பருகலாம். ஆசனம் மாலையில் செய்வதற்கு அரைமணி நேரத்துக்கு முன்தான் தாகத்திற்குக் கடைசி முறையாகத் தண்ணீர் அருந்தியிருக்க வேண்டும். அதன்பின் கூடாது. அதற்கு முன்பு எத்தனை தடவை வேண்டுமானாலும் ஜலம் அருந்தலாம்.

**கேள்வி :**—சர்வாங்காசனம், சிரசாசனம் செய்யும் போது உமிழ் நீர் சுரந்தால் விழுங்கக் கூடாது என்று எழுதியிருக்கிறீர்கள். மற்ற ஆசனங்கள் செய்யும்போது விழுங்கலாமா? கூடாதா?

**பதில் :**—சர்வாங்காசனம், சிரசாசனங்களில் அதிக நேரம் நிற்பதால் சிலருக்கு உமிழ் நீர் ஊறும். அவர்கள் ஆசனத்தைக் கலைத்த பிறகே உமிழ் நீர் விழுங்க வேண்டும். மற்ற ஆசனங்களில் இவைகளைப்போல அதிக நேரம் இருப்பதில்லை. அப்படி மற்ற ஆசனங்களைச் செய்யும் போதும் ஊறினால் உமிழ் நீரை விழுங்கக் கூடாது. அடக்கி வைத்திருந்து ஆசனத்தைக் கலைத்துச் சாதாரண நிலைக்கு வந்தபின்தான் விழுங்க வேண்டும்.

**கேள்வி :**—பஸ்சிமோத்தானாசனத்தில் கால்களின் கட்டை விரல்களைப் பிடித்த பின் முழங்கால் முட்டி வரை முகத்தைக் கொண்டு சென்று ஏழு அல்லது பத்து வினாடி மட்டும் இருக்க வேண்டுமென்று இருக்கிறது. அப்பொழுது மூச்சை எப்படி வைத்திருப்பது? பக்கை வெளியில் விட்ட நிலையில் அப்படியே இருப்பதா? அல்லது மூச்சை உள்ளே இழுத்துக் கொண்டு அப்படியே வைத்திருப்பதா? அல்லது மூச்சைச் சாதாரணமாய் விடவும் வாங்கவும் செய்வதா?

**பதில் :**—மூச்சை எப்பொழுதும் போல சாதாரணமாய் விடவும் இழுக்கவும் செய்யலாம்.

**கேள்வி :**—நான் சைவன். முட்டையைச் சாப்பிட வேண்டுமானால் பச்சையாகச் சாப்பிடுவது நல்லதா? அவித்துச் சாப்பிடுவது நல்லதா? பாலில் விட்டுச் சாப்பிடுவது நல்லதா? ஆசனம் செய்தபின் சாப்பிட வேண்டுமா? அல்லது அதற்கு முன்பே சாப்பிட வேண்டுமா?

**பதில் :**—முட்டையைச் சாப்பிடாமல் வேறு விதங்களில் அதைப் போல நல்ல சத்துள்ள ஆகாரங்களைப் பெற முடியும். தற்காலத்தில் சைவ உணவாகிய காய்கறிகளுடன் முட்டையையும் சேர்த்திருக்கிறார்கள்! முட்டையைச் சாப்பிடத்தான் வேண்டும் என்பவர்கள் எப்படியும் சாப்பிடலாம். சிலருக்குப் பச்சையாகச் சாப்பிட்டால் பிடிக்காது. அவர்கள் பாலில் விட்டுச் சாப்பிடலாம். இதை ஜீரணம் செய்துகொள்ள முடியாதவர்கள் சிறிது அவித்துச் சாப்பிடலாம். ஆனால் நன்றாய் வேகவைத்து விடக்கூடாது. முட்டையை எப்படிச் சாப்பிட்டாலும் ஆசனங்கள் செய்து முடித்த அரைமணி நேரத்திற்குப் பின்பே சாப்பிட வேண்டும். முன்பு கூடாது.

**கேள்வி :**—ஆசனங்கள் எல்லாம் செய்த பிறகு எப்பொழுது குளிக்கலாம்?

**பதில் :**—ஆசனங்களை எல்லாம் செய்த அரை மணி நேரத்திற்குப் பின் குளிக்கலாம்.

**கேள்வி :**—நாடி சுத்தியை ஆசனம் செய்த பின்தான் செய்ய வேண்டுமா? ஆசனம் செய்வதற்கு முன்பும் செய்யலாமா? காலையில் குளித்துவிட்டு, ஆசனத்திற்கு முன் செய்யலாமா?

**பதில் :**—நாடி சுத்தியை ஆசனம் செய்தபின் தான் செய்ய வேண்டுமென்பதில்லை. தவிர ஆசனம் செய்பவர்கள் தான் செய்ய வேண்டுமென்பதுமில்லை. எல்லோரும் செய்யலாம். எந்த சமயத்தி



மாணவன் பரீக்ஷை ஹாலில் வினாத் தாளைக் கையில் வைத்துக் கொண்டு விழித்தான்.

உபாத்தியாயர் (அவன் அருகில் மெதுவாக வந்து):—ஏன் விழிக்கிறாய்? கேள்வி புரியவில்லையா?

மாணவன் :—கேள்வி நன்றாய்ப் புரிகிறது. அதற்கு "ஆன்ஸர்" தான் புரியவில்லை, ஸார்!



"புகையிலை போடுகிறதை விடுவதற்காக 'ஸிகரெட்' பழக்கத்தைப் புதிதாக ஆரம்பித்தீர்களா?"

"இல்லை, இல்லை. புகையை விடுவதற்குத்தான் 'ஸிகரெட்' பிடிக்க ஆரம்பித்தேன்!"

னும் செய்யலாம். சிலர் பஞ்ச வேளைகளாகிய அதிகாலை, காலை, நடுப்பகல், மாலை, இரவு என்று ஐந்து வேளைகளில் செய்வார்கள். சாதாரணமாக காலை, மாலைகளில் நாம் செய்தாலே போதும். அபரிமிதமான பலன் உண்டு. காலையில் குளித்து நாடி சுத்தி செய்துவிட்டுத் தியானத்தில் அமரலாம். தியானத்திற்கு நாடி சுத்தி துணை செய்யும். ஆசனங்கள் செய்து முடித்த பின் நாடி சுத்தி செய்தால், உடல் கலகலப்பாய் நன்றாய் இருக்கும். ஆசனப் பலனும் அதிகமுண்டு. தியானத்திற்கும் நல்லது. ஆகையால்தான் நாடி சுத்தியை ஆசனம் முடித்ததும் செய்யவேண்டுமென்றேன்.

**கேள்வி :**—நாடி சுத்தியை நின்று கொண்டு செய்யலாமா? உட்கார்ந்து செய்ய வேண்டுமா?

**பதில் :**—நின்று கொண்டே செய்யலாம். ஆனால் அப்படிச் செய்ய அவசியம் ஏற்படாது. நின்று கொண்டு செய்யலாமென்றால், ஏன் அதே இடத்தில் உட்கார்ந்து நாடி சுத்தியைச் செய்யக் கூடாது? பத்மாசனத்தில் உட்கார்ந்து செய்தால் தான் பூரண பலன் உண்டு. நாற்காலியிலும் உட்கார்ந்து வேலை செய்பவர்களுக்கு இடுப்பு, மார்பு, கழுத்து போன்றவை வலிக்கும். அப்பொழுது நாற்காலியில் உட்கார்ந்தவாறே முதுகெலும்பை நேராய் நிமிர்த்திச் சிறிது நேரம் நாடி சுத்தி செய்யலாம். உட்கார்ந்து குனிந்து வேலை செய்வதினால் நுரையீரல்களுக்குப் போதிய பிராண வாயுப் பிரவேசம் கிடைக்காது. அவ்வப்பொழுது சிறிது நேரம் நாடி சுத்தியைச் செய்தால் நல்ல பிராண வாயு நுரையீரல்களுக்குச் சென்று ரத்தம் சுத்தமாகி ஒரு புதிய உற்சாகம் உதிக்கும். மூளையும் தெளிவுபட்டுச் சுறுசுறுப்படையும்.

ஏன், நாடி சுத்தியைப் படுத்த வண்ணமும் செய்யலாம். சாந்தி ஆசனத்தில் படுப்பதுபோலப் படுத்து, நாடி சுத்தியைச் செய்யலாம். தூக்கம் வராதவர்கள் இம்மாதிரி நாடி சுத்தியைச் சிறிது நேரம் செய்தால் நல்ல தூக்கம் வரும். அதிக நோயாளியாய் இருந்து படுத்த படுக்கையுடன் இருப்பவர்களும், படுத்தவாறே நாடி சுத்தியைச் செய்யலாம். அதனால் அவர்களுடைய நோய் வெகு சீக்கிரத்தில் குணமடையும்.

**கேள்வி :**—ஆசனத்தையோ நாடி சுத்தியையோ செய்தவுடன், வரட்சை மிகுதியால் தாகமெடுத்தால் தண்ணீர் அருந்தலாமா?

**பதில் :**—உடனே அருந்தக்கூடாது. பதினைந்து நிமிஷத்திற்குப் பின் அருந்தலாம். ஆசனம் நாடி சுத்தி செய்தவுடன் உடல் உஷ்ணமாய் இருக்கும். அப்போது உடனே குளிர்ந்த ஜலம் அருந்தினால் உடலைப் பாதிக்கும். சிலருக்கு ஜலதோஷம் பிடிக்கும். சளி கட்டும். வெந்நீரானாலும் பதினைந்து நிமிஷத்திற்குப் பின்தான் சாப்பிட வேண்டும்.

**கேள்வி :**—ஆசனங்கள் செய்து சாந்தி ஆசனம் செய்தவுடன் நாடி சுத்தியைச் செய்ய வேண்டுமா? அல்லது அதையும் அரை மணி நேரம் பொறுத்துத்தான் செய்ய வேண்டுமா?

**பதில் :**—ஆசனம் செய்து சாந்தி ஆசனம் செய்து முடித்தவுடன் நாடி சுத்தியைச் செய்யலாம். அரை மணி நேரம் பொறுத்துத்தான் செய்ய வேண்டுமென்ற அவசியமில்லை. ஆனால் ஏதாவது அவசர காரியமிருந்து அதனால் அரைமணியோ, அதன் பிறகோ செய்ய வேண்டியதாய் இருந்தால், அப்படியும் செய்யலாம். அதையே வழக்கமாய்க் கொள்ளக் கூடாது. உடனே செய்வது உத்தமம்.

**கேள்வி :**—காலைச் சூரியனைப் பார்த்துக்கொண்டே நாடி சுத்தி செய்து விட்டு, அதன் பின் சூரியனைப் புருவ மத்தியில் வைத்துத் தியானம் செய்யலாமா?

**பதில் :**—தியானத்தின் போது மனதைப் புருவ மத்தியில் நிறுத்த, இப்படிப் பழகுவதும் ஒரு மார்க்கம்தான். அதற்கு நாடி சுத்தியைச் செய்து கொண்டே பார்க்க வேண்டிய அவசியமில்லை. நாடி சுத்தியைச் செய்யும் போது கண்களை மூடி மனதை நம் சுவாசத்தில் நிறுத்தி, மெதுவாய் இழுக்கவும் விடவும் செய்ய வேண்டும். அதே சமயம் நாம் சுவாசத்தை இழுக்கும்போது பிராண வாயு உள்ளே நிறைவதாகவும், அதனால் நாம் ஆரோக்கியமடைவதாகவும் நினைக்க வேண்டும். அதைப் போலவே மூச்சை வெளியில் விடும்போது நம் உள் இருக்கும் நோய்கள், கஷ்டங்கள், துன்பங்கள் முதலியன முற்றிலும் நம்மை விட்டு நீங்குவதாகவும் நினைக்க வேண்டும். இப்படி மனதினால் இம்மாதிரி நினைக்கும்போது நமக்கு ஆரோக்கியம் கிட்டும். அப்படி நினைப்பதை விட்டு, கண்களைத் திறந்து சூரியனைப் பார்க்கும் போது, மனது வெளி விஷயங்களில் செல்லும். அப்படிச் செல்லாமல் சூரியனைப் பார்க்கப் பழக வேண்டும். அதற்கு நாடி சுத்தி செய்து கொண்டே பார்க்க வேண்டியதில்லை. நாடி சுத்தியை அவரவர்களுக்கு வேண்டிய அளவு செய்து முடித்து, அதன்பின் சில விநாடி சூரியனை உற்றுப்பார்த்துப் புருவ மத்தியில் சூரியனை நிறுத்த முயற்சிக்கலாம். சூரியன் மட்டுமல்ல, விளக்குத் திரியின் ஜோதி, ஓம் எனும் பிரணவம், தாமரை மலர் என்று பலவிதம் அவரவர்களுக்குப் பிடித்தமானதைப் புருவ மத்தியில் நினைத்துத் தியானித்து வரலாம்.

**கேள்வி :**—பஸ்சிமோத்தானாசனம் செய்து விட்டு மறுபடியும் ஆரம்ப நிலைக்கு வரும்போது மூச்சை எப்படி வைத்திருப்பது?

**பதில் :**—மூச்சை இழுத்தவாறே கால்களை விட்டுக் கைகளைக் கூட்டி, அப்படியே பின்னால் படுக்க வேண்டும். பொதுவாய் ஒரு விதியைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது எந்த ஆசனத்தைச் செய்தாலும் குனியும் போது மூச்சைவிட வேண்டும். நிமிரும் போது மூச்சை சாதாரணமாக இழுக்க வேண்டும். (தொடரும்)


BILE BEANS







Edited Printed and Published by R Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras


வெப்பத்திலோ...


அல்லது குளிரிலோ...




Erasmic
HIMALAYA
BOUQUET
SNOW

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*